நெல்லைச் சித்தாந்த சைவச் செந்நெறிக் கழக வெளியீடு நிர். 16.

உ
சிவமயம்



# நம: பார்வதீ பதயே







## பார்வதி கல்யாணம்





சித்தாந்த சைவச் செந்நெறிக் கழகம்
73, கீழப்புதுத் தெரு
திருநெல்வேலி டவுண்.

தை. விசாகம் 22—1—60

நெல்லைச் சித்தாந்த சைவச் செந்நெறிக் கழக வெளியீடு நிர். 16.



உ
சிவமயம்

# நம: பார்வதீ பதயே

திருநெல்வேலிப் பேட்டை
சித்தாந்த பண்டித பூசணம்
ஆ. ஈசுரமூர்த்திப் பிள்ளை அவர்களால்
எழுதப்பட்டது.

ஸ்ரீ தாயுமானவர்

— குரு பூஜை வெளியீடு —

22—1—1960



நன்கொடையாளர்
T. R. பிச்சையா பிள்ளை
காரியதரிசி, சித்தாந்த சைவச் செந்நெறிக் கழகம்
புரோப்ரைட்டர்:- கலியாணி பிரஸ்
68, கீழப்புதுத் தெரு, (:) திருநெல்வேலி டவுண்.

உ
திருச்சிற்றம்பலம்

ஸ்ரீ மெய்கண்ட தேசிகன் திருவடி வாழ்க.

# நன்றியுரை.

திருநெல்வேலிக் கல்யாணி பிரஸ் அதிபர் திரு. T. R. பிச்சையா பிள்ளையவர்கள் தம் பணச் செலவில் 'நம: பார்வதீ பதயே' என்ற இந்நூலை அச்சிட்டு ஸ்ரீ தாயுமான சுவாமிகளின் குருபூசை தினமாகிய இன்று வெளியிடுகிறார்கள், சமரசம் என்ற சொல்லுக்கு மெய்ப்பொருள் காணமாட்டாமல் மனம்போன போக்கில் பொருள் கூறிச் சமரசப் பிரசாரங்கள் பல செய்துவருபவரைத் தெருட்டி நாட்டுக்குப் பணிசெய்ய வேண்டுமென்ற ஆசையால் 'தாயுமானவர், சமரசம்—அத்வைதம்' (By லேட் V. P. காந்திமதிநாத பிள்ளையவர்கள் B. A., வக்கீல் அம்பை) என்ற நூலையும், சைவாலயங்களில் எழுந்தருளி யிருக்கும் மூர்த்திகளின் தத்வார்த்தங்களை விளக்கிக் காட்ட வேண்டுமென்ற ஆசையால் 'சிவலிங்க தத்வார்த்தம், தக்ஷிணாமூர்த்தி தத்வார்த்தம்' (By லேட் திரு. பொ. முத்தையா பிள்ளையவர்கள், தூத்துக்குடி) என்ற நூலையும் தம் சொந்தப் பணச் செலவில் இதற்கு முன் அவர்கள் அச்சிட்டு உபகரித்திருக்கிறார்கள். சைவசமயக் கூட்டங்களில் நாமாவளி முழுங்குவதிலே சில விபரீதங்கள் காணப்படுகின்றன, சைவசமூகத்தின் ஒன்றுபட்ட வாழ்வுக்கு அது எவ்வகையிலும் அனுகூலந் தராது, பாரம்பரியமாகவுள்ள நாமாவளியின் முழக்கமே முற்றிலும் உதவக் கூடியது என்ற உண்மையைப் பரப்ப

வேண்டுமென்ற ஆசையே அவர்கள் இந்நூலை வெளியிடுதற்குக் காரணம். இங்ஙனம் சைவசமய வரம்புக்குள் நின்று கால நிலையைக் கண்டு, ஏற்புடைய பல சைவ நூல்களை வெளியிட்டு வரும் அவர்களது சைவ சேவையை வைதிக சைவ சமூகம் மனமாரப் பாராட்டாமலிருக்க முடியாது.

அவர்கள் நெல்லைச் சித்தாந்த சைவச் செந்நெறிக் கழகத்தில் தொடக்க முதலே காரியதரிசியாக இருந்து வருகிறார்கள். இவர்களைப் போன்ற சிலரைக் காரியதரிசியாகக் கொண்ட சைவசித்தாந்த சபைகள் வேறும் பிற நகரங்களில் இருக்குமாயின் அச்சபைகளும் இக்கழகம்போல அதிர்ஷ்ட முடையனதான். உயர்திரு. T.R.P. பிள்ளையவர்களின் நல்ல உள்ளமே நான் இயற்றிய இந்நூல் வெளிவரக் காரணமாயிற்று. அவர்களுக்கு என் நன்றி உரியதாகுக. அவர்களுடைய முன் வெளியீடுகள் போலவே இதுவும் நெல்லைச் சித்தாந்த சைவச் செந்நெறிக் கழக வெளியீடாக வுள்ளது. அவர்களுக்கும் அவர்கள் குடும்பத்துக்கும் எல்லாவகையிலும் நல்வாழ்வு சித்திக்கும்படி ஸ்ரீ பார்வதீ பதியார் திருவருள் சுரக்குமாறு அவருடைய திருவடிகளைத் திரிகரணசுத்தியோடு நான் வணங்கி வேண்டுகிறேன்.

ஆ. ஈசுரமூர்த்திப் பிள்ளை
ஆக்கியோன்

உ

திருச்சிற்றம்பலம்

ஸ்ரீ மெய்கண்ட தேசிகன் திருவடி வாழ்க.

# நம: பார்வதீ பதயே.

## தோற்றுவாய்

சில வருடங்களுக்கு முன்வரை பாரததேசம் அடிமைப் பட்டுக்கிடந்தது. அதன் சுதந்திரத்தேர் கொண்டுபோய் நிறுத்தப்பட்டிருந்த விடம் இங்கிலாந்து. இப்பாரதத்தை ஆங்கிலேயர் ஆண்டனர். அத் தேரை இங்கு இழுத்துவர வேண்டும். அதற்காக முயன்ற பெரியார் பலர். அவருள் காந்தி கூர்ச்சரர். லதிபதிராய், பாஞ்சாலர். வ. உ. சிதம்பரம் பிள்ளை தமிழர். சுபாஷ் வங்கர். கோகலே மராடர். பிற மாகாணங்களிலும் அவரனையார் பல ரிருந்தனர். ஒவ்வொருவரின் முயற்சியும் போற்றற் குரியது. ஆனல் அவரெல்லாம் தத்தம் மாகாணத் தளவில் முயன்றனரெனக் கொள்க. அத்தேர் இங்கு வந்திருக்குமா? வடத்திற் பல நார்க ளுள. ஒவ்வொரு நாரும் தன்னளவில் வலியுடையதுதான். ஆயினும் அவற்றை முறுக்கி ஒன்ருக்கவேண்டும். ஒருவடம் கிடைக்கும். அதுவே தேரை இழுக்க வல்லது. அப்படியே அவர் முயற்சிகளைக் கூட்டி ஒருமுகப்படுத்த வேண்டும். அது செய்யப்பட்டது அதுவே அச்சுதந்திரத்தேரை இழுத்து வந்தது. அன்று முதல் இத் தேசம் மானமுடையதாய்

விளங்கி வருகிறது. அம் முயற்சிகளை அங்ஙனம் ஒருமுகப் படுத்திய சாதனங்கள் எவை? அவை பல. அவற்றுள் வந்தேமாதர கோஷம் ஒன்று. அது அப் பெரியாரின் உள்ளத்தில் உணர்ச்சியை யெழுப்பியது, உத்வேகத்தைக் கிளப்பியது, ஊக்கத்தை உந்தியது. அதற்கு இடை முறிவு இருந்ததில்லை. இத் தேசத்தின் அடிமைத் தனத் தைத் தகர்த்தது அவரது முயற்சியே, அக் கோஷமன்று என யாராவது சொல்லுவாரா? சொன்னால் அவரைப் புத்திசாலி யென்னலாமா?

இப்போது சுதந்திர வாழ்வு நடந்து வருகிறது. இனியும் அக்கோஷம் வேண்டுமா? கிடைத்த சுதந்திரத் தைப் பாதுகாத்தல் ஒன்று. எதிர்காலப் பிரஜைகளுக்குத் தேசநலத்திற் பராமுகம் நேரக்கூடும், அதனைத் தடுத்து உற்சாக மூட்டல் இன்னொன்று. இவ்விரண்டற்கும் அக் கோஷம் அவசியம். ஆகலின் அது வேண்டும்.

வந்தேமாதரம் என்பது தேச கோஷம். அதுபோன் றது **நம: பார்வதீ பதயே** என்பது. ஆனால் இது சமய கோஷம், தொன்றுதொட் டிருந்துவருவது. நம: பார்வதீ பதயே யென்பதும் ஒரு தளையைத் தகர்த்தெறியவே உள தாயிற்று. அத் தளையாவது யாது? விசார மதுவே. கிட் டத்தட்ட நூற்றைம்பது வருடங்களாக இத்தேசம ஆங் கிலவாட்சியிலிருந்தது. அவ்வடிமை வாழ்வை யுணர்ந்து அதிலிருந்து விடுபட உழைத்த வீரர் எப்போது உளரா யினர்? சுதந்திரங் கிடைப்பதற்கு முப்பது நாற்பது ஆண்டுகளுக்கு முன்னிருந்து உளராயினரவர். அக்காலம் அவ்வடிமை வாழ்வின் பிற்பகுதியாகும் அவர் தேர்ந்த கல்விமான்கள். ஆங்கில ஆட்சியில் தீங்கு மிக்கிருந்தது. அதனை அவர் கண்டனர், வெறுத்தனர், தேச மக்களுக்

குச் சாங்கோபாங்கமாக எடுத்துரைத்தனர். ஆனால் அவ்வடிமைக் காலத்தின் முற்பகுதி யெப்படி? அப்போதும் இத் தேசத்தவருள் படித்தவர், பட்டம் பெற்றவர், பதவி வகித்தவர், சிலபல கலைகளில் தனிப்பட்ட தேர்ச்சியுடையவர் எல்லாரு மிருந்தனர். அவர் 'வாழ்க வாழ்கவே ஜார்ஜ் மன்னர் வாழ்க வாழ்கவே' God save our gracious king, Long live our noble king, Send him vrictorious, Happy and glorious, Long to reign over us, god save the king' என்று துதி பாடினர்; ஆங்கில ஆட்சி அளவிடற்கரிய நலன்களை இத் தேசத்துக்குச் செய்தது என்று பிரசங்கித்தினர், பிரசுரித்தனர். இரு பகுதி மக்களும் கல்வியறிவுடையரா யிருந்தும் பிற்பகுதியார் அப்படியும், முற்பகுதியார் இப்படியும் பிரசங்கிப்பானேன்? பிரசுரிப்பானேன்? முற்பகுதியினருக்குக் கல்வியிருந்தும் தம் வாழ்வு அடிமைவாழ்வு என்பதை உணரத் தகுந்த அறிவாற்றல் இல்லை. அஃதோ ரானந்த வாழ்வாகவும் அவருக்குப்பட்டது. பிற்பகுதியினர் அவ்வாட்சியின்கீ ழிருந்து வாழ வெள்கினர். வித்தியாசம் அவ்வொன்றே. அப்படியே நம: பார்வதீ பதயே என்ற கோஷத்தால் தகர்த்தெறியப்படுந் தளையும் எல்லார்க்கும் அறிய வாராது. அவ்வகையில் இக்காலைச் சுதந்திர மக்களும் அம் முற்பகுதி மக்களே போல்வர். பிற தளைகளுக்கெல்லாம் மூலமாயதளை அது. அஃ தறுபடுக; பிற தளைகளத்தனையுந் தாமே இற்றொழியும். அஃ தறுபடப் பெற்றவரே மெய்யான விடுதி பெற்றவர். மேலே சொன்ன பிற்பகுதியார் ஆங்கில ஆட்சியைத் தளையெனக் கண்டனர், அதிலிருந்து விடுதிபெற்றனர். ஆனால் மூலத்தளை இதுவென அவரும் இதுவரை யறிந்திலர். எத்தளையையுந் தளையென் றறியவேண்டும். அவ்வறிவுடையானே அதிலிருந்து விடுபட முயல்வான், விடுபடவுஞ் செய்வான்.

## மூலத்தளை

நம: பார்வதீ பதயே என்பதால் அறுபடுகிற மூலத் தளையாவது யாது? அதுதான் சரீரம். அதற்கு உள்ளிருப்பது உயிர், வெளியி லிருப்பது உலகம். அவ்வுயிரையும் உலகையுங் கூட்டிவைப்பது உடம்பு. அவ்வுடம்பு விழுக. அத் தொடர்பு யாதாம்? தாம் வாழப் பிறந்ததாகப் பிதற்றித் திரிவார் சிலர். அங்ஙனமாயின் வாழ்வதற்குரிய திட்டத்தை வகுத்தல், அதற்கேற்ற விதத்தில் சரீரத்தை அமைத்தல் ஆகியவற்றை அவர் இவ்வுலகிற்கு வருமுன்பே செய்துகொள்ளுதல் வேண்டும், பிறகுதான் அவர் சரீரத்திற் புகுந்து உலகிற்கு வந்து வாழவேண்டும். அப்படியானுற்றுன் அவர் வாழப் பிறந்தவராவார். ஆனுல் அவர் அப்படிப் பிறந்திலர். யாரும் சரீரத்தை விரும்பியவாறு பெறவில்லை. எல்லாரும் தாம் அறியாமலே முதலிற் பிறந்துவிடுகின்றனர்; பின்னர்த்தான் பலபல விரும்புகின்றனர். உலகம் இன்ப நிலைய மென்பார் வாழப் பிறந்ததாகச் சொல்லிக் கொள்பவர். அவ்வின்பத்தை ஆரத் துய்க்க வேண்டும் அவருக்கு ஆசை அது. ஆனுல் அவ்வின்பத்தி னளவுக்கும், அவ்வாசையி னளவுக்கும் ஏற்ற விதத்தில் சரீரம் இருப்பதில்லை. அவருக்குச் சரீரம் பிறப்பு முதல் இறப்புவரை வாழ உதவவேண்டும். அஃதில்லை. குழவிப் பருவமும் கிழப் பருவமும் வாழச் சிறிதும் உதவா. அவை விருதா. அவற்றை அவர் கொள்ளலாமா? அவர் செத்தும் போகின்றனர். வாழப் பிறந்தவர் செத்தொழியலாமா? சரீரம் விரும்புமுன் கிடைக்கிறது. விரும்பியபடி அமைகிறதில்லை, விருப்பத்துக்கு மாருக விழுந்தும் விடுகிறது. ஆகலின் அது தளையாயிற்று. அவர் வாழப் பிறந்ததாகச் சொல்வது வகையற்ற பேச்சு.

உலகிற் பலருக்கு வாழ்க்கையில் துன்பமேயுள்ளது. அவருக்குச் சரீரம் தளை அதாவது பந்தம் ஆகலாம். சிலர் எப்போதும் சுகாநுபவிகளாயிருக்கின்றனர். அவருக்குமா சரீரம் தளை? இவ்வினா எழலாம். துயரமடையாதவர் யாருமிலர். அதுகிடக்க, சுதந்திரப்போர் நடந்தது. வீரர் பலர் சிறை வைக்கப்பட்டனர். அச் சிறையில் ஏ, பி, ஸி என்ற தரங்களிருந்தன. ஏ வகுப்புச் சிறையிற் கிடைத்துவந்த வசதி வீட்டினுங் கிடையாதாம். ஆயினுமென்? அச் சிறையுஞ் சிறைதானே, அப்படியே இன்பத்திற் புரள்பவருடைய சரீரமுந் தளையேயாம்.

சரீரமே மூலபந்தம், அதிலிருந்து விடுபடுவதே உண்மையான விடுதியென்றால் சரீரத்தை நீக்கிக்கொள்வதெப்படி? நஞ்சுண்ணலாமா? தூக்குப்போட்டுக்கொள்ளலாமா? அப்படி நீக்கிக்கொள்வதைத் துன்ப நிவர்த்தியெனக் கருதுவாருமுளர். நீக்கிக் கொண்டாரும் பலர். அது பந்த நிவர்த்தியாகாது. ஏன்? சரீரத்தை நீக்கிக் கொள்வது இரண்டு வகை. ஒரு சரீரத்தை விட்டால் மறு சரீரங் கிடைக்கும். ஒரு சிறையிலிருந்து மற்றொரு சிறைக்கு மாற்றப்படுவதுபோலும் அது. பாம்பு சட்டை கழற்றுகிறது. மீண்டும் சட்டை உண்டாகிறது. அது போலுமாம்.

‘மஞ்சுளவிவ் வுடல்வாழ்க்கை மாற்றுவதே
    பயன்போல மதித்துச் சொன்னாய்—
நஞ்சுமிழுட் டுளையெயிற்று நாகமுரி
    பல்காலு நழுவச் செய்தும்—விஞ்சவுரி
மேன்மேலு முறுவதுகண்
    டிலைபோலும் வினைநே ராக—
வெஞ்சலிலாச் சிவஞானத் தேகனிலொன்
    றுமளவு மெய்துங் காயம்’

என்ற பூவாளூர்ப் புராணங் காண்க. பின்னர்ச் சரீரங் கிடைப்பதற் கேற்ற வகையில் முன் சரீரத்தை விடுவதுதான் மரணம், சாவு, இறப்பு எனப்படும். நஞ்சு, தூக்கு முதலியவற்றால் நேர்வது அதுவே. அது ஒரு வகை. அது தளை நீக்க மாவதில்லை; துன்பநீக்க முந் தராது. கிடைத்த சரீரத்தை மீண்டும் சரீரங் கிடையாத வகையில் விடுவது இன்னொரு வகை. அதுவே சரீரமாகிய தளையின் உண்மையான நீக்கம். விடுதி, வீடு, முத்தி, மோக்ஷம் என்பது அதுவே. அதுவே துன்ப நீக்கமும் இன்ப ஆக்கமுமாம். அம் முத்தியைப் பெறும்வரை மக்களுக்குச் சாவும் பிறப்பும் இருந்துகொண்டிருக்கும். ஒரு சரீரம் போம். இன்னொரு சரீரம் கிடைக்கும். அது போம், மற்றொன்று வரும். அத்தொடர்ச்சி ஓயாது. எலும்பிற் சுவையில்லை. நாய் அதைக் கடிக்கிறது. அலகு புண்ணாகும் அதிலிருந்து குருதி யொழுகும். அந்நாய் சுவைப்பது அவ்வி ரத்தம். அச்சுவை எலும்பிலிருந்து கிடைப்பதுபோல் அது நினைத்துக் கொள்கிறது. துன்பமே அதற்குச் சுகம். உலகம் அவ்வெலும்பு போன்றது. சரீரமும்

'தவறுமிக் கிழைத்தாற் கழூத்தினி லிறைவன்
சாற்றொணுப் புழூத்தலை நாயை—
யவமுறப் பிணித்தான் முகஞ்சுழிந் தழுங்கி
யருவருத் தரையனை யிரந்து
நவில்பிணிப் பகற்ற விழைவரே யல்லா
னன்கென மதிப்பரோ வதுவே
யுவமையென் றுணர்ந்தோருடலை யோம்புவரோ
விளசை வாழொருவனை மறந்தே.

(இளசைப் பதிற்றுப் பத்தந்தாதி 99
ஸ்ரீமத் சிவஞான சுவாமிகள்)

என்றபடி யுள்ளது. அதன் வரலாற்றை ஆராய். அஃதோ ரற்புத எந்திரம். ஆனுல் மிகவும் அசுசியான வஸ்துக் களால் அஃ தாக்கப்பட்டது. அதன் அற்புதத்தைக் காண். அதனை ஆக்கித்தந்த இறைவனை வணங்கு. அதன் அசுசியைக் காண். அதனை வெறு. அதனை மீண்டும் பெறுதற்கின்றி நீக்கிக்கொள்ள முயல்.

'மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்ருர்க் குடம்பு மிகை'

என்றருளிய வள்ளுவர் காலில் விழுந்து நல்லபுத்தி பெறு.

விஞ்ஞானம் வளரப் பெற்றது மேலைநாடு, ஈன்ஸ்டன், கார்ல்மார்க்ஸ், லெலின், பிராட்லா, இங்கர்சால் முதலியோர் அந்நாட்டறிஞர். உயிர் உடம்பிற் கூடுதல் அதாவது பிறப்பு ஒருதலை யென்ற கொள்கை அவரிடம் இல்லையெனத் தெரிகிறது. அவர் அக் கொள்கையைப் பரிகசிக்கவுஞ் செய்யலாம். அங்ஙனம் அவர்க்கெல்லாம் ஒவ்வாத அது எம்மறிவுக்குப் பொருத்தமாதல் யாங்ஙனம்? அப்படி வினவுவார் இந் நாட்டவருள்ளும் உளர். மேலை நாட்டார் கண்டனவுங் கொண்டனவுமே உண்மை, அவரே நம்மவரின் நம்பிக்கைக்குத் தக்காரென்பது மிகவுங் கீழ்த்தரமான எண்ணம். அஃதுடையாருக்குத் தேசம் சுதந்தரம் பெற்றதேயன்றி அவரறிவு விடுதிபெற வில்லை. நம் பிராசீனர் தந்துவைத்த அறிவுநூல்கள் அளவிறந்தன. அவற்ருேடு அவ்வினுக்காரருக்குத் தொடர்பு அன்றே அறுந்து போயிற்று. அவர் அகதிக ளாயினர். அவர் சற்றே ரோஷமுடைய ராகுக; தம் அறிவைச் சற்றே தேசிய மாக்குக. அதுகொண்டு அவ்வறிவு நூல் களிற் பயில்க. சரீரம் தனையே யென்பதை அவர் அறிவர்.

முதலிற் சிந்திக்க வேண்டுவதைத் தெரிக. பிறகு அது பற்றிச் சிந்திக்க. அரிசிச்சோறு உண்ணலாமா? கோதுமைரொட்டி தின்னலாமா? இவையும் இவைபோன் றனவுமா சிந்தனை? விலங்கு பறவைகளிடங் கூட அச் சிந்தனையில்லை. அவை உணவுச் சங்கடமின்றி வாழ் கின்றன, அதைக்கண்டு மனிதன் வெள்கவேண்டும். மேலை நாட்டில் எத்தனை பிறப்பெடுத்தாலும், எவ்வளவு கல்வி பயின்றாலும் சரீரம் தளை யென்னும் உண்மையை யறிந்துகொள்ள முடியாது. பிறப்பதும், இருப்பதும், இறப்பதும் தாமே நிகழ்வன என்பது அவர் கொள்கை, அவ்வகையில் காரண காரிய வாதம் அவர்க்கு வெகு தூரம். சந்திர மண்டலம் போகலாமா, செவ்வாய் மண்டலம் போகலாமா எனத் துடிப்பா ரவர். அங்குப் போனாலும் அவர் பிறப்பதற்கே தொழிலாகி யிறப்பர். சரீரத் தளையை விட்டு அவரால் நீங்கவே முடியாது.

அது நீங்கிய வுயிரே உண்மை விடுதி பெற்றதாகும். அறியவேண்டுவது அதற்குறிய வாயில், உடைந்த மரக் கலம் பிறிதோ ருடைந்த மரக்கலத்தைக் கரையேற்ற மாட்டாது. கருப்பவாச முற்ற ஒருயிர் கருப்பவாசமுற்ற இன்னோருயிருக்கு அவ்வாசத்தை அதாவது அத்தளையை நீக்குவ தெங்ஙன்? கருப்பவாச மில்லாதவனாலேயே அது முடியும். இறைவனொருவனே அத்தகையான். கருப்ப வாச மின்மையே இறமைக் குணங்களில் தலையாயது. அவ்விறைவ னுவார் சிவபெருமா னொருவரே.

,அஜாத இத்யேவ கச்சித்பீரு: ப்ரபத்யதே ருத்ரயத்தே தக்ஷிண முகம் தேநமாம் பாஹிநித்யம்'

என்றது சுவேதாசுவதரம்.

'என்பினை நரம்பிற் பின்னிக்
குடர்வழும் பிறைச்சி மெத்திப்
புன்புழுப் பொதிந்து செந்நீர்ப்
புண்ணசும் பொழுகி நாறித்
துன்பநோ யெவற்றி னுக்கு
முறையுளாய்ப் புறந்தோன் மூடும்
வன்புலை யுடம்பே யாவி
வருத்திடும் பிணிவே றில்லை.

'பெரும்பிணி யிதனைத் தீர்க்கு
மருத்துவன் பிறவி யில்லாப்
பரம்பொரு ளான முக்கட்
பரமனே யென்று தேறி
முரண்பயில் விடையோன் றென்பான்
முகத்தினைச் சரண மெய்தி
விரும்பிவீ டுறுதற் பாலார்
பிறப்பினை வெருவப் பெற்றார்'

என்றது காஞ்சிப் புராணம். பிறரெல்லாம் பிறந்திறக்கும் பசுக்களே. பசுக்கள்—உயிர்கள். அவற்றிற் கெல்லாம் அவரொருவரே அத்தளையை நீக்க வல்லார். ஆகலின் அவரையே முழுமுதற்கடவுளென எல்லாவுயிர்களும் உணர்ந்து வழிபடவேண்டும் பக்தி மிகுந்து அவ் வழிபாட்டை இடையீடில தாக்குக. அதனால் அவ்வுயிர்கள் பக்குவ மெய்தும். அவற்றின்பால் அவர் அருள் சுரப்பர். அவ்வருள் அத்தளையைத் தகர்த்தெறியும். அவை மீண்டும் பிறவா அதாவது சரீரம் எடா. அவ் விடுதியே முத்தி. பாரததேசம் விடுதி பெற்றதற்கு வந்தே மாதரம் துணை புரிந்தது. 'வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை' என்றபடி பிறவாமை யாகிய பெருநலத்தை யெய்துவிப்பது நம: பார்வதீ பதயே யென்னும் முழக்கம். அதனை யோர்க.

## பாரத நாட்டுச் சிறப்பு

தமிழகத்துக்கு வடக்கெல்லை நேற்றுவரை வேங்கடம், இன்று திருத்தணிகை. மேற்கெல்லை கடலென்பது அன்றே போயிற்று மேற்குத் தொடர்ச்சிமலை அவ்வெல்லையாகிப் பலநூறு வருடங்கள் சென்றன. சேர (கேரள) நாடு இனி என்றுமே தமிழகப் பகுதியாகமாட்டாது. தமிழர் வெறும் ஆரவாரக்காரரே யென்பது அதனுல் வெளி. பாரத தேசத்தின் நிலை இப்போது எப்படி? ஒருபகுதி பாகிஸ்தானுயிற்று. மீதிதான் இப்போதுள்ள பாரத தேசம். இச் சுருக்கமும் வருத்தத்திற்கு இடந்தான்.

மாகாணங்களும் மாகாண மொழிகளும் சாதிகள் முதலியவும் இங்குள. எந்த விஷயத்திலும் இருப்பனவற்றை ஒழிப்பதால் நலங்காண முடியாது. நலஞ் செய்வன எவை? அவற்றை விருத்தி செய்வது எப்படி? அவ்விரண்டிற்கும் விடைகாண வேண்டும். ஆராய்ச்சி அதுவே. பின்னர் மக்கள் அவற்ருேடு நேரானதொடர்பு கொள்ளுமாறு நல்லதொரு வழி வகுக்கப்பட வேண்டும். ஆக்கவேலை அது. அவ்வாராய்ச்சியும் ஆக்க வேலையும் மிகமிகக் குறைந்தன. அதுவும் வருத்தத்திற்குரியது.

எந்தநாட்டுக்கும் அதன் பாரம்பரியமே இலக்கணம். அதனை இழப்பது அவலத்திற் கறிகுறி. இப்பாரத நாட்டுக்கும் ஒரு பாரம்பரியம் உண்டு. அதுதான் வடமொழியும் சைவ சமயமும். இத்தேசத்துக்குத் தொன்றுதொட்டே வடமொழி உரிய பொதுமொழியும், சைவசமயம் உரிய பொதுச்சமயமும் ஆகும். அவை உதாசீனம்

செய்யப்பட்டன. இத்தேசம் இப்போதுள்ள நிலைக்கு வந்தது.

பாரத தேசவாசிகளாகிய நாம் மற்றைநாட்டு மக்களோடு ஒத்துப்போக வேண்டும். அஃது அவசியம். ஆனால் அதற்கு வழி யாது? அவர் நம்போ லாகவேண்டும் அல்லது நாம் அவர்போ லாகவேண்டும் என்பார் சிலர். அவரவர் தம்தம் பாரம்பரியத்தைப் பாதுகாத்துக் கொண்டு மற்றவரோடு அளவளாவுவதே கௌரவமான நேசம், அப்பாரம்பரியத்தை விட்டு உலகத்தளவில் நேசமா யிருந்தொழிவது விலங்கியலே என்பார் வேறு சிலர். பின்னவர் சொல்வதே தரம். அது எவ்விதத்திலும் பிறரோடு மாறுகொளச் செய்யாது. ஆனால் முன்னவர் சொல்வதுதான் பெரும்பாலும் அனுஷ்டானத்திலிருந்துவருகிறது. அது போகவேண்டும். பாரத தேசம் தன் பாரம்பரியத்தோடு இயைந்தொழுகிச் சிறந்திடுமாயின் மாகாணங்கள், மாகாண மொழிகள், சாதிகள் முதலியன பற்றிய வேறுபாட்டில் துவேஷம் புகாது, வேறுபாடு நல்லது. துவேஷம் தீயது அப்பாரம்பரியங்களுள் வடமொழியை விட்டு வைத்துச் சைவசமயத்தைச் சிறிது விசாரிக்கலாம்.

இந்நாட்டைப் பரதன் என்றோ ரரசன் ஒருசேர ஆண்டான்; அதனால் இதற்குப் பாரதமென்ற பெயர் வந்ததென்பார் ஒரு சாரார். ஆனால் அவனுக்கும் அந்தப் பெயர் இரவலே, பரதன் என்ற சொல்லுக்குப் பொருள்தா னென்னை? அதனைக் கண்டார் கவிசார்வ பௌமராகிய ஸ்ரீ கச்சியப்ப முனிவர்.

'வருசமு சார வேலா வலயத்தின் கரையே யான
வருளினிற் சேர்த்த லாலே யறைவர்பா ரதப்பேர்'

என்ற பூவாளூர்ப்புராணங் காண்க. மக்கள் பிறவிக்கடலைக் கடந்து சிவனருளாகிய கரையை யெய்திச் சுக முறுதற்குப் பல்லாற்ருனும் வாய்ப்புடையதா யிருத்தல்பற்றி அத்தேசம் பாரதம் எனப்பட்டது என்பது அவ்வடிகளின் கருத்து. அதனை உயர்பாரதமெனப் புகழ்ந்து அதற்கான காரணத்தையுஞ் சொல்வர் அம்முனிபுங்கவர்.

'முத்தேவ ராதி புலவோர்கள் விண்ணின்
முழுதின் பகற்றி யருளின்
பித்தேறி நின்ற முனைவன் பதங்கள்
பெருகன்பி னூடு பணியு
மத்தேய மான வுயர்பாரதம்'

என்ற தணிகைப்புராணங் காண்க. இனிப் பாரததேசம் மாதாவானுல் அத்தேசவாசிகளுக்குப் பிதா யார்? அதாவது அம்மாதாவுக்கு நாயகன் யார்? அக்கணவன் இல்லாமலிருக்க முடியாது. அவன்ருன் சிவபெருமான். விவேகானந்தர்

¶'OH INDIA! FORGET NOT THAT THY DIETY IS THE GREAT ASCETIC OF ASCETICS UMANATH SHANKAR'

என அறிவுறுத்தியதால் அது புலனும் 'The great ascetic of ascetics Umanath Shankar' என்பது 'ருத்ரோ மஹர்ஷி;' என்ற சுவேதாசுவதர வாக்கியத்தின் பெயர்ப்பாகும். ஆகவே பாரத புத்திரராகிய நாம் பிறப்பினை வெருவிப் பரமசிவனுரின் திருவடிக் கரையைச் சேர்ந்தாற்ருன் அம்மாதாவின் பெயரைக் காப்பாற்றியவராவோம் அதற்காக உள்ளது அப்பாரம் பரியம். அதனை யிழப்பது தகாது. இன்னென்று. சிவபெருமான்

---

¶ Swami Vivekananda. A Collection of his speeches and writings with portraits Second Edition Published by C. A. Natesan & Co Madras.

தாண்டவ மூர்த்தி. அதனால் அவருக்குப் பரதன் என்பதும்பெயர். அப்பெயர் வேதத்திலுள்ளது. அவருக்குத் தொண்டுபட்டது இத்தேசம், அதனாலும் இதன் பெயர் பாரதமாயிற்று. மக்களை அப்பரத மூர்த்தியின் திருவடிக் கரையில் சேர்த்தவல்ல கோஷம் நம: பார்வதி பதயே யென்பது.

## முழக்க வகைகள்

பாரததேசம் சைவ ஸ்தானமே. சைவசமய மொன்றே இதற்குரிய சனாதன தர்மம். சிவபெருமானே முழுமுதற் கடவுளென்பது அச்சமயக் கொள்கை வைணவ சமயம் விஷ்ணுவையே முழுமுதற் கடவுளென்னும். அரியுஞ் சிவனு மொன்று என்கிற சமயம் சைவமு மன்று, வைணவமு மன்று. அவ்விரண்டற்கும் வேறாகிய **மாயாவாத** மென்கிற சமயம் அது. அம்மூன்று சமயங்களுக்கும் பொதுவாக ஒரு பெயரை அயல்நாட்டார் தம் மொழியில் இட்டிருக்கின்றனர், அது **இந்து** என்பது. அப்பெயர் அம்மொழியில் ❦இழிந்தபொருளுடையது. ஆயினும் அப்பெயரை வைத்துக் கொண்டு வைணவமும் மாயாவாதமும் செல்வாக்குப் பெற்று வருகின்றன. சைவத்துக்கு அது கூடிவரவில்லை. கூடிவரவும் வேண்டாம்.

சைவர் வழிபாட்டின் பொருட்டுச் சைவாலயங்களிற் கூடுவர்; தேவார கோஷ்டி, சிவகதா காலக்ஷேபம், பஜனை. குருபூஜை, சைவப்பிரசங்கம் முதலியவற்றிலும் கூடுவர். அப்போது இடையிடையே ஒருவர் ஒரு தொடரை முழங்குவர். அதனைத் தொடர்ந்து

---

❦ விளக்கம் இப்புத்தகம் இறுதியில் பார்க்க —

உடனே கூட்டத்தினர் ஒருசேர இன்னொரு தொடரை முழங்குவர். அப்படி முழங்கப்படுந் தொடர்கள் நான்கு. அவை

| | ஒருவர் | கூட்டத்தினர் |
|---|---|---|
| 1. | நம: பார்வதிபதயே | ஹரஹர மஹாதேவ |
| 2. | சித் ஸபேசா | சிவ சிதம்பரம் |
| 3. | கார்த்திகேய நாம ஸங்கீர்த்தனம் | சிவ ஸுப்ரஹ்மண்யோம் |
| 4. | வல்லீ காந்த ஸ்மரணம் | சிவ ஸுப்ரஹ்மண்யோம் |

என்பன. இது போன்ற முழக்கம் வைணவக் கூட்டங்களிலும் உண்டு. கோவிந்த நாம ஸங்கீர்த்தனம், ஜானகீ காந்த ஸ்மரணம் முதலியன அச்சமயத் தனியார் முழங்வன. அவற்றிற்குத் தக அச்சமயக் கூட்டத்தினரும் முழங்குவர்.

மேற்கண்ட நான்கில் தனியார் முழக்கங்களில் சித் ஸபேசா என்பது பெயரளவில் நிற்கிறது. மற்றவற்றில் நம: , ஸங்கீர்த்தனம், ஸ்மரணம் என்பன சேர்ந்திருக்கின்றன. நம: —நமஸ்காரம், ஸங்கீர்த்தனம்—நன்ருகச் சொல்லுதல், ஸ்மரணம்—நினைத்தல். இந்தக் கட்டுரையில் நம; பார்வதீ பதயே என்பதை சிறிது நீண்ட விசாரணைக்கு எடுத்துக்கொண்டு மற்றத் தொடர்களைச் சுருக்கி விளக்குவேன்.

## நம: பார்வதீ பதயே
### (வரலாறு)

பரமசிவனுர் கணவனுர். உமாதேவியார் மனைவியார். அவ்வம்மையார் தமக்கு மகளாராக வரவேண்டுமெனத் தவங்கிடந்தார் தக்கனும் பர்வதனும். அம்மை

யாரும் அங்ஙனமே வந்து வளர்ந்தனர். தக்கனிடம் வளரும்போது தாட்சாயணி யென்பது அவர் பெயர். பர்வதனுக்குப் புத்திரியா ரானபோது அவர் பார்வதி யெனப்பட்டார்; தாட்சாயணியாருக்கும் பார்வதியாருக்குங் கலியாணம் நடந்தது. சிவபிரான் அவருக்குக் கணவன் ஆனார். ஆனால் நம: தாக்ஷாயணிபதயே யென முழங்குவதில்லை, ஏன்? தக்கன் பரமசிவனைப் பகைத்தான். அவன் செய்த சிவநிந்தைகள் பல. இக்காலை நாத்திகர் முதலிய பிறசமயத்தார் செய்துவரும் சிவத்துவேஷப் பிரசங்கத்துக்கு அவையே ஆதாரம். தாட்சாயணியார்க்குத் தந்தைசெயல் பிடிக்கவில்லை. அவனாற் கிடைத்த பெயரன்றோ தாட்சாயணி யென்பது! அப்பெயரை அவரே வெறுத்தார். அதனால் அப்பெயர் முழக்கத்துக்கு வராமற்போயிற்று.

ஆனால் நம: பார்வதீ பதயே யென்ற முழக்கமிருந்து வருகிறது. அஃதேன்? தக்கன் சிவத்துவேஷ யாகமொன்று செய்தான். அதிற் கூடியிருந்தவர் பல்கோடியர். இக்காலை நாத்திக மகாநாடுகளுக்கு அக்கூட்டந்தான் ஆரம்ப விழா. அப்போது தக்கன் செய்த சிவநிந்தைகளை அக்கூட்டத்து ஆடவர் பெண்டிர் அனைவரும் ஆமோதித்தனர். அதனால் அக்கூட்டம் தும்சம் செய்யப்பட்டது. அக்கூட்டத்தினருள் கண் தோண்டப்பட்டார், மூக்கறுபட்டார், பல் உடைபட்டார், காது மூளியாக்கப்பட்டார், நெஞ்சு குடையப்பட்டார், சவட்டப்பட்டார், துவைக்கப்பட்டார், உழக்கப்பட்டார், பிசைந்து பிழியப்பட்டார், கொல்லப்பட்டர் பலப்பலர். சிவத்துரோகம் மிகமிகப் பொல்லாத தன்றோ? ஆகலின் அத்தண்டனை போதவில்லை, பாக்கியு மிருந்தது.

அதையுங் கொடுத்தாக வேண்டும். அதற்காகச் சூர பதுமன் தாரகன் முதலிய அசுரர் தோன்றினர். அத் தக்கயாகத்திற் சம்பந்தித்திருந்த பிரம விஷ்ணுவாதி சகல தேவர்களேயும் அவ்வசுரக் கூட்டம் பலபடியாக ஹிம்ஸித்துவந்தது. தேவர்களெல்லாந் தவித்துப் போனூர்கள். பிறகு அத்துன்பந் தொலேயுங் காலம் நெருங்கியது. அதனேத் தொலேக்கவும் அவர்க்கு அருள வும் வல்லார் குமாரக்கடவுளே.

'ஆற்றன் மிகுந்த தாரகனே
யழிக்கு மாற்ற லுடையவர்க
டோற்றி யொழிந்தோர் தொகையுள்ளுந்
தோற்றி யிருக்கின் றருள்ளுந்
தோற்றி வருவார் குழுவுள்ளு
மில்லே சுடர்வெண் டிங்கண்முடி
யேற்றி யிருந்த தலேவனரு
ளெறிவே லிளவ லேயல்லால்'

(பூவாளூர்ப் புராணம்)

என்ற உண்மையைக் கண்டான் பிரமன். தாட்சாயணி யாராய் வந்து மீண்ட உமாதேவியார் பர்வதனிடம் பார் வதியாராய் வளர்ந்துவந்தார். பரமசிவனூர் கயிலேயில் யோகிருந்தார். அவர் பார்வதியாரை மணந்துகொள்ள வேண்டும். இன்றேல் முருகப்பெருமான் அவதரிப்ப தெப்படி?

'குமரக் கடவு ளவதரிக்குங்
கொள்கைக் கேது விலேதொடையிற்
பமர முரலுங் குழலுமையாள்
பனிமால் வரையின் வளர்கின்றுள்
சமர மழுவேந் தியகரத்துத்
தலேவர் யோகத் திருக்கின்று
ரமரர் வெருகின் வாய்க்கிளிபோன்
றவுண ரலேயா லழிகின்றுர்'

(பூவாளூர்ப் புராணம்)

எனக் கூறிக் கவன்றனர் பிரம ஞுதியோர். முதலில் நடைபெற வேண்டுவது கலியாணம். அதற்காகப் பிரமன் மன்மதனேப் பரமசிவன்மேல்

ஏவினுன். சூழ்ச்சியால் அவர் திருவுள்ளத்தை மாற்றமுடி யாது. மன்மதன் அவர் நெற்றிக்கண் நெருப்புக்கு இரை யானுன். பிரமன்முதலியோர் நடுங்கினர். பின்னர் அவர் கயிலைக்குச் சென்று கண்ணுதலாரை நேரில் வேண்டி னர். பார்வதி பரமசிவனுர் கலியாணமும் நடந்தது.

பிரம விஷ்ணுவாதி பல்கோடி தேவர்களின் வேண்டுகோளால் நடந்த கலியாண மன்ருே அது? அக் கலியாணப் பந்தரில் தாலிகட்டி முடிந்தது. மணவரை யில் திருவீற்றிருந்தனர் தம்பதிகள். வந்திருந்த முதி யோர் மணமக்களை ஆசீர்வதிக்க வேண்டும். அது சைவ மரபு. யார் அத்தம்பதிகளை ஆசீர்வதிப்பார்? எல்லாரும் அவரை வணங்குதற்கே உரியார்; அவர்பால் ஆசியும் பெற்றிருப்பார். வந்தவர் தம்பதிகளை வணங்கி அவரிட மிருந்து விபூதிப்பிரசாதம் பெற்றுக் கொள்கிற கலி யாணமு முண்டு. அதுதான் சஷ்டியப்த பூர்த்தி. அறுபதாங் கலியாணம் என்பதும் அதற்குப் பெயர். ஆக மணமக்களை ஆசீர்வதிக்குங் கலியாணம், மணமக்க ளிடமிருந்து ஆசிபெறுங் கலியாணம் எனக் கலியாணம் இரண்டாதல் காண்க. பார்வதி பரமசிவனுர்க்குப் பிற ரெல்லாம் புத்திரரும் அடியாரும் அல்லரோ? ஆகலின் அக்கலியாணம் முதற் சொல்லப்பட்ட கலியாணமா யிருந்தாலும், வந்தவ ரனைவரும் அவரை வணங்கி ஆசி பெறுங் கலியாணமாகவு மிருந்தது. அன்றியும் தேவ ராதியோரின் துக்கநிவிர்த்திக்கும் சுகப்பிராப்திக்குமென நடந்த கலியாணம் அது. ஆகலின் அக்கலியாணத்துக்கு வந்திருந்தவருள் விஷ்ணுவானவர் சிரசின்மேற் கூப்பிய கையினராய் அத்தம்பதிகளின்முன் நின்று 'நம: பார்வதீ பதயே' என எல்லாருடைய காதுகளிலும் விழும்படி

பெருமுழக்கஞ் செய்தனர். அம்முழக்கத்துக்குப் பிரதி யாக ஏனைத் தேவர்முனிவ ரனைவரும் அஞ்சலியத்தராய் 'ஹர ஹர மஹாதேவ' என முழங்கினர். அத்தனை பேருக்கும் அத்தம்பதிகளிடமிருந்து அபயமுங் கிடைத் தது.

அன்றுமுதல் பரமசிவனார் பார்வதிபதி யாயினார். நம: பார்வதீ பதயே முதலிய முழக்கங்கள் நான்கும் அத்திருக்கலியாண வாசலிலே அத்தம்பதிகளின் திரு முன்னே முதன் முதலாக முழங்கப்பட்டன. அக்கலியா ணத்துக்குமுன் பார்வதிபதி யென்ற திருநாமம் அவர்பால் உளதாதற்கு ஏதுவில்லை. அக்காலை அவர் உமாபதி யாகவே திகழ்ந்திருக்கவேண்டும். அக்கலியாணத்துக்குச் சிலபல காலத்துக்குப் பின்னர்த்தான் நம: பார்வதீ பதயே யென்ற முழக்கம் தொடங்கியதெனவுஞ் சொல்ல முடியாது. சொன்னால் அக்கால தாமதத்துக்குக் காரண மென்னை? அதுவுமில்லை. ஆகலின் அக்கோஷந் தொடங் கிய இடமுங் காலமும் அக் கலியாணமே யென்பது திண் ணம். அக்கோஷத்தைத் தொடங்கியவர் மஹாவிஷ்ணு வேதானா? ஆம். சூரனாதி யசுரரால் துயரெய்தியவர் பலப்பலர். அவர்க்குள் தலையாயவர் திருமால், ஆக லின் அவர் தொடங்கினா ரென்பது பொருந்தும். அன்றி ருந்து நாளிதுவரை ஆன்றோர் அம்முழக்கத்தைப் பய பக்தியுடன் செய்துவருகின்றனர். அதனை மறுத்துநின்ற வர் எந்தக் காலத்திலு மிலர். அதாவது அதற்கு இடைமுறிவே யிருந்ததில்லை யென்பது. அக்முழக்கம் சுருதி சித்த மென்றற்கு அங்ஙனமாய ஆன்றோ ராசா ரமே சான்றாத லறிக. உமாபதியார் பார்வதிபதி யானார். அது குமரக்கடவுளின் திருவவதாரத்துக்கு மூல மாயிற்று.

## விளக்கம்

நம: பார்வதீ பதயே என்பது பார்வதியின் பதிக்கு நமஸ்காரம் எனப் பொருள் படும். நமஸ்காரம்-வணக்கம். அப்பதி யாவர் சிவபிரான். வணங்குகிறவன் அடியவன். வணங்கப்படுகிறவன் ஆண்டவன். வணங்குதல் வணங்கப் படுதல் என்னும் இரண்டாலுமே அடியவன் இவன், ஆண்டவன் இவன் என்பது அறியப்படும். சிவ ஒருவனே ஆண்டவன். அவ்வுண்மை அத் தொடரில் விளக்கம்.

'ஸ்தோமம் வோகத்ய ருத்ராய சிக்வஸே
க்ஷயத் வீராய நமஸா திதிஷ்டந
ஏபிச் சிவஸ்வ வாம் ஏவயா வபி:
திவஸ் ஷிஷக்தி மருதோ நிகாமாபி:

(தேவர்களே! உங்களை எப்பொழுதும் துதிகளைத் துதிக்கின்றோம். அழிக்குந் திரமுள்ள சிவனிடத்தில் வணக்கங்களைச் சமர்ப்பித்து விடுங்கள். இவைகளாலும் எல்லாவற்றாலும் உங்களுக்கே நன்மை ஏற்படும். விருப்பங்களால் உங்கள் உலகங்களைச் செழிப்புறச் செய்வார்) என்ற ருக்வேத மந்திரக் கருத்து அது. அச் சிவனல்லாத பிறரெல்லாம் அவனை நமஸ்கரிக்கிற அடியவரே. அவரெல்லாம் உயிர்கள். சிவபிரானுக்கும் உயிர்களுக்கு முள்ளது ஆண்டானடிமைச் சம்பந்தம்.

'டாய வாருயிர் முழுவதும் பசுபதி யடிமை
யாய வெவ்வகைப் பொருள்களு மவனுடைப் பொருள்கண்
மேய விவ்வண மலதுவே றின்றென வுணர்ந்த
தூய மெய்த்தவத் தடியவர் துணையடி தொழுவாம்'

என்றது தணிகைப் புராணம் அச் சம்பந்தம் நித்தமானது. அதனையும் அத்தொடர் உணர்த்துகிறது:

அதனை அறிந்து செய்கிற ஸங்கீர்த்தனமும் ஸ்மரணமுமே மெய்ப்பயன் தருவன. அல்லாதன அல்லாத பயனையே தரும். நம: சப்தம் பிற சமய கோஷங்களி லில்லை.

வேதாகமோக்த மந்திரங்கள் பல. அவற்றுக்கெல் லாந் தலையாயது பஞ்சாக்கரம். அது நமசிவய என்பது. மந்திர ராஜம் என மதிக்கப் படுவது அது. அதிலுள்ள நம: சப்தம் அத் தொடரிலிருக்கிறது. சி காரம் பார்வதீ பதியாகும். வ காரம் பார்வதி. ய காரம் ஆன்மாவுக் குரியது. அப் பகுதி அத் தொடரி லில்லை: ஆயினும் அடக்கமா யுண்டு. எப்படி? வினைமுத லில்லாமல் வினை நிகழாது. நம: என்பதில் நமஸ்கரித்தல் என்ற வினை யிருக்கிறது. நமஸ்கரிப்பவனாகிய ஆன்மா வினைமுதல். நமஸ்கரிக்கும்போது அவனுக்குத் தற்போதம் இராது. தற்போதமாவது நான் என்னுஞ் செருக்கு. அது மடங் கும். அம்முனைப் படங்கிய நிலையைக் காட்டவே அத் தொடரில் உயிர்ப்பகுதி விடப்பட்டது. ஆனால் நம: என் பதில் அது சூசகமா யுண்டு. ஆகலின் பஞ்சாக்கரத்தின் மற்றொரு வடிவமே அத் தொடர் என்க.

பரமசிவன் சத்து. உமை சித்து. ஸ்கந்தன் ஆனந் தம். அம் மூவருங் கூடிய நிலை சச்சிதானந்தம். அது ஸோமாஸ்கந்த வடிவம்.

> 'ஏல வார்குழ லிறைவிக்கு மெம்பிரான் றனக்கும்
> யால னாகிய குமரவே ணடுவுறும் பான்மை
> ஞால மேலுறு மிரவொடு பகலுக்கு நடுவாய்
> மாலை யானதொன் றழிவின்றி வைகுமா றொக்கும்'

என்றது கந்தபுராணம், ஸோமன்-உமாநாதன். அவனே பார்வதீபதி. அவன் ஸ்கந்தாவதாரத்தின்

பொருட்டுப் பார்வதீ பதியானான். அவ்வவதார நோக்கம் நம: பார்வதீ பதயே யென்பதி லுண்டு. ஆகலின் அத்தொடரால் ஸ்கந்த வணக்கமுஞ் செய்யப்பட்டதாயிற்று.

ஸ்கந்தன் இளையோ னெனப்படுவான். இளையோன் கனிஷ்டன். ஜ்யேஷ்டனின்றிக் கனிஷ்டனில்லை. ஸ்கந்தனுக்கு ஐயேஷ்டன்மார் அதாவது தமையன்மார் மூவர். அவர் விநாயகர், பைரவர். வீரபத்திரர் என்பார். அத்திருக்குமாரர் நால்வரும் பரமசிவனின் மூர்த்தி பேதங்களே.

> 'உருவம்வே றன்றி யைந்து
> முகனறு முகனென் றேதுந்
> திருவுரு விரண்டன் மாட்டுஞ்
> சிவமெனும் யாமே மன்ற
> பொருவிலா ருயிராய் நிற்பேம்
> பொலிந்தவிவ் வுருவி னின்றுந்
> தருவர மவண தாங்குத்
> தரும்வர மிவண தாமே'

என்றது தணிக்கைப் புராணம். சிவபிரானே ஸ்கந்தரைக் குறித்து அங்ஙனம் சொன்னார். மற்ற மூவர் விஷயத்திலும் அதுவே உண்மை. இளையோனை வணங்கினார் மூத்தோரையும் வணங்கினோரே. ஆகலின் இளையோன் வருதற்பொருட்டுப் பார்வதிபதியாயினாரை வணங்குவது இளையோனுக்கு மாவதுபோல் அம்மூவருக்கு மாவது காண்க.

கணவனோடு கூடி வாழ்கிறாள் ஓ ருத்தமி. ஆயினும் அவன் அவளுடம்புக்கே நாயகன். சிவபிரானொருவரே எல்லா வுயிர்களுக்கும்போல் அவளுயிர்க்கும் நாயகர்.

'கொழுநன் யாரினு மினியவ னென்று கூறுவரக்
கொழுந னிவ்வுடற் குரியவன் குறிக்சி லாருயிர்க்குக்
கொழுநன் றந்தைதாய் செல்வமு மேனவுங் கொன்றைக்
கொழுந னைத்தொடைக் குளிர்சடைச் சிவபிரா னென்றும்'

என்றது காஞ்சிப்புராணம். பார்வதிக்குமாத்திரம் திரு மேனியும் உயிரும் வேறுவேறு பொருள்களல்ல. பொருளால் அவ்விரண்டும் ஒன்றே. அவ்வுண்மை இலக்குமி சரஸ்வதி முதலிய வேறு பெண்டிருள் யார்க்குங் கிடையாது. அவர்க்கெல்லாம் உடலும் உயிரும் பொருளால் வேறு தான். அவருடலுக்கு நாயகர் விட்டுணு பிரமன் முதலியோர்; உயிர்க்குச் சிவனொருவனே நாயகன். பார்வதி விஷயத்தில் சிவனுர் அவளுடலுக்கு நாயகரா? உயிருக்கு நாயகரா? என்ற வினுவுக்கே இடமில்லை. அவ்விரண்டிற்கும் அவரே நாயகர். ஆகலின் அவளொருத்தியே பெண்ணி னல்லாள். அவ்வம்மைக்குப் பிரம விஷ்ணுவாதி சமஸ்த சீவரும் புத்திரர். ஆகலின் அவள் ஜகன்மாதா.

'தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை'

என்றது திருக்குறள், அவ்வம்மையளவில் அது நூற்றுக்கு நூறு உண்மை, அவளுக்குத் தெய்வமுங் கொழுநனும் ஒருவரே யாகலின். பதிக்குச் செலுத்தப்படும் வணக்கம் பத்தினி தனக்குஞ் செலுத்தப்பட்டதாகக் கொண்டு மகிழ்வாள். ஆகலின் அத்தொடரால் பார்வதி தேவியாரும் வணங்கப்பட்டவரானுர்.

மணமகள் வீட்டிற் கலியாணம் நடந்தது. அவள் பிறந்த ஊரில் மணமகன் உலவுகிருன். அவனைத் தெரி

யாதாரும் அங்கிருப்பர், அவர் 'இவன் யார்?' எனத் தமக்குள் வினவிக்கொள்ளலாம். அவனைத் தெரிந்தா னொருவன் அவருளிருந்தால் அவன் 'இவன்றான் இன்னா னின் மகளுக்கு மாப்பிள்ளை' யெனப் பெண்ணை முதலில் அறிமுகப்படுத்தி விடைதருவான், சிவபிரான் கலியாண மும் பெண்வீட்டில் நடந்தது. சைவசம்பிரதாயம் அது. அதனை விளக்கவும் அவர் பார்வதிபதி யெனப்பட்டார்,

கேனம் என்பது ஓருபநிஷத்து. அதில் ஒரு வர லாறுண்டு. பிரம விஷ்ணுவாதிதேவருக்கும் அசுரருக்கும் போரொன்று நடந்தது. வென்றார் தேவர். அவர் ஓரி டத்திற் கூடினர். ஒவ்வொருவரும் தாமே அசுரரை வென்றதாகப் பெருமை பேசிக்கொண்டனர். அவர்க் குள்ளேயே சண்டை வருவதுபோ லிருந்தது. அப் போது பரமசிவனார் ஓர் இயக்க வடிவில் வந்து ஆகாயத் தில் நின்றுகொண்டு அத்தேவர் குழுவில் துரும் பொன்றை வீசி அவரைப் பார்த்து 'நும்முள்யார் அத் துரும்பைச் சிதைக்கின்றனரோ அல்லது அசைக்கவா வது செய்கின்றனரோ அவரே அசுரரை வென்றவர்' என்று கூறினர். அவரவர் அத்துரும்பில் தம் ஆயுதங் களைச் செலுத்தினர். அவனன்றி ஓரணுவும் அசையா தன்றோ? ஒருவராலும் அத்துரும்பை ஒன்றுஞ் செய்ய முடியவில்லை. வெட்கத்தால் அவர்தலை இறங்கியது பிறகு அண்ணாந்து பார்த்தா ரவர். அவ்வியக்க வடிவம் நின்றவிடத்தில் உமாதேவியார் நின்றார். அவ்வுப நிஷத்து அவரை

'பஹுசோபமானா முமாம் ஹைமவதீம்' எனக் கூறிக் கௌரவிக்கின்றது. ஹைமவதி யென்றாலும் பார்

வதியென்ருலும் பொருளொன்றே. தேவர் அவ்வம்மை யாரை நோக்கித் 'தாயே, எம் செருக்கைத் துரும்பொன் றில் அழித்த அவ்வியக்க வடிவினர் யார்? அவரை எம் மால் அறியமுடியவில்லை. நீரே அறிவித்தருளல் வேண் டும்' என வேண்டினர். 'அவ்வடிவில் வந்தவர் பரமபதி யாகிய சிவபிரானே' என்ருர் அம்மையார். தாயே பிள் ளைக்குத் தந்தையைக் காட்ட வல்லாள். உண்மையில் அசுரரை வென்றது உள்ளிருந்து இயக்குகிற சிவபரம் பொருளே யென்ற ஞானம் அப்போதுதான் அத்தேவ ருக்கு உதித்தது. அவர் அப்பொருளைத் தியானித்துத் தம் இருப்பிடஞ் சேர்ந்தனர். நம: பார்வதீ பதயே என் பதில் அவ்வரலாறு புலனுவது காண்க.

கலியாணத்துக்குமுன் பரமசிவனுல் மன்மதன் தகிக் கப்பட்டான். அவன் பாணத்துக்கு வசப்படாதவர் அவரொருவரே. அவர் சுவேச்சையால் பார்வதியாரை மணந்தார். அவர் அத்தேவியாருடன் கூடியிருப்பது அவரது போகவடிவம். சமஸ்த சீவரும் போகந் துய்க்க அவர் திருவுளங்கொண்டு எடுத்தது அவ்வடிவம். போக காமிகள் அவ்வடிவத்தை வணங்கிவருக. அவருக்குச் சகல போகங்களுஞ் சித்திக்கும். அவர்பொருட்டும் அத் தொடர் உளதாயிற்று.

இறந்துபோன மன்மதனை அப்பரமனுர் தம் கலி யாணத்தில் எழுப்பி இரதிக்குக் கொடுத்தார். இரதி மீண்டும் சுமங்கலை யானுள். உத்தமிகளாகிய சுமங்கலி களுக்குத் தாலிப்பாக்கியத்தின் பொருட்டும் அத்தொடர் வேண்டப்படுவ தாயிற்று.

அன்றுமுதல் இரதியும் மதனும் உலகில் தமது ஆட்சியை மறுபடியும் நடத்திவருகின்றனர். ஆகலின்

உலகிற்கே பேருபகார மாயிற்று சிவபிரான் பார்வதிபதி யானது. அதனாலும் அம்முழக்கம் சிறந்த தென்க.

அகத்தியனாரும் அக்கலியாணத்துக்கு வந்திருந்தனர். ஆனால் கலியாண வேளையில் அவர் அங்கில்லை. சிவனார் அவரைப் பொதிகைக்குச் செல்க என்றார். முனிவர் வருந்தினர். 'நீ போய்ப் பொதிகையிலிரு, இக்கலியாணக் காட்சியை உனக்கு அங்குக் கொடுப்போம்' என்றார்பிரானார். அப்படியே நடந்தது. வடமொழியோடு தொடர்புடையதாய் அதனை நிகர்த்தது தமிழ்மொழி. அதற்கு இலக்கணம் வகுத்த முதலாசிரியர் அம்முனிவர். அவருக்குப் பார்வதிபதியார் தம் கலியாணக் காட்சியை அப்பொதிகையில் வைத்துக் கொடுத்தருளினார். அவர் சங்கற்பத்தால் முனிவர் சிரசிற் கூப்பிய கையினராய் நம: பார்வதீ பதயே என முழங்கி நமஸ்கரித்தார். உடனிருந்த செந்தமிழ் மாணவர் முதலிய அனைத்துச் சைவசீலரின் வாயிலிருந்தும் ஹர ஹர மஹாதேவ என்ற முழக்கம் விண்ணதிர வெளியாயிற்று, ஆகவே அக்கலியாணம் அவ்வளவில் பொதிகையிலும் நடந்ததாகக் கொள்ளப்படும். பிற மாகாண மொழிகளின் இலக்கண முதலாசிரியன்மாருக்கு அக்காட்சி வழங்கப்பட்டதென்ற வரலாறில்லை. தமிழச் சைவருக்கு அத்தொடரோடு உளதாகிய தொடர்பு பெரும் பாக்கிய மாகும்.

## பிற முழக்கங்கள்

### ஹர ஹர மஹாதேவ என்றதன் கருத்தென்னை?

'மூவரும் முப்பத்து மூவரு மற்றொழிந்த—தேவருங் காணாச் சிவபெருமான்' என்றது திருவாசகம்.

அத்தனை தேவரும் அக்கலியாணத்துக்கு வந்திருந்தனர். அவர் வாயிலிருந்து மஹாதேவ சப்தம் வந்தது. தேவரெல்லாம் ஏகோபித்துச் சிவபிரானை மஹாதேவனென்றால் அதுவே அப்பிரானது முழுமுதற்றன்மைக்குச் சான்று. அக்கலியாணம் அதற்கொரு தக்க சந்தர்ப்பமாயிற்று. அச்சான்றின் தரம்

'வாது செய்து மயங்கு மனத்தரா
யேது சொல்லுவி ராகிலு மேழைகாள்
யாதோர் தேவ ரெனப்படு வார்க்கெலா
மாதே வன்னலாற் றேவர்மற் றில்லையே'

என்ற தேவாரத்தாலும் அங்கீகரிக்கப்பட்டது. சிவபிரானே முழுமுதற் கடவுளென்ற நிச்சயபுத்தியை விட்டு அவரை வணங்குவதாற் பயனென்னை? ஹர என்பதும் மஹாசங்காரக் கடவுளாகிய அப்பிரானுக்கே பெயர். 'ப்ரபுர் ஹர;' என்றது பதிவாக்காகிய சிவஞான போதம். 'தேவர்களாகிய எங்களுக்கெல்லாம் தனி முதற்தேவர் நீரே. அதனால் நீரே மஹாதேவர். எமக்கு இருந்துவருந் துயரத்தை ஹரிக்கும்பொருட்டே நீர் பார்வதிபதியாயினீர்' என அத்தேவர்கூட்டம் துதித்தனர். ஹர ஹர மஹாதேவ என்ற பிரதிகோஷம் அதை விளக்க எழுந்தது. மெய்யடியார் கூட்டம் ஹர ஹர முழக்கமே செய்வதைப் பெரிய புராணத்திற் பலவிடங்களிற் காணலாம்.

சிற்சபேசா என்றுலென்னை? அது சித் + ஸபா + ஈசா எனப் பிரிபடும். சித்—ஞானம். ஸபா—அம்பலம் ஈசன் — ஆள்பவன். சிவசிதம்பரம் என்பதும் சிவ +

சித்+அம்பரம் எனப்பிரிந்து அப்பொருளே தரும். சிவன்- இன்பஞ் செய்பவன். சிற்சபை, சிதம்பரம், சிதாகாசம், சிற்றம்பலம் எல்லாம் ஒன்றே. அத்தனைக்கும் பொருள் அருளே. அருளால் ஆள்பவன் ஈசன். அருளால் இன் பஞ் செய்பவன் சிவன். அருளே பார்வதி. 'நாம் சைவ நீதி தவறித் தக்க யாகத்துக்குச் சென்றோம். ஆள்பவ ராகிய அவ்வீசனார் நம்மைத் தண்டித்தார். அது மறக் கருணை. இக் கலியாணம் நம்மைச் சைவநீதியில் நிறுத்தி யது. இன்பஞ் செய்பவராகிய அச்சிவனார் நமக்குத் துன் பந் துடைத்து இன்பஞ் செய்துவிட்டார். இது அறக் கருணை'. எனக் கூறி அத்தேவர் மகிழ்ந்தார். அதை விளக்கவே அவ்விரு முழக்கங்களும் உளவாயின.

**கார்த்திகேய நாம ஸங்கீர்த்தனம்** என்ற முழக்கம் ஏன்? கார்த்திகேயனுடைய பெயரை நன்றாகச் சொல் லுதல் என்பது அதற் கருத்தம். குமரன் அவதரித்ததும் அவனுக்கு முதலிற் பாலூட்டியவர் கார்த்திகைப் பெண் டிர். அவனருள் முதலில் அப்பெண்டிர்க்கே கிடைத் தது. அதனால் கார்த்திகேயன் என்னும் பெயரையும் அவன் வகித்தான். அக்கார்த்திகைப் பெண்டிர்க்குப் போல் தமக்கும் அவன் விரைந்து அருள்பாலிக்கவேண்டு மென அத்தேவர் விண்ணப் பித்தனர். அவ்வுண்மை அம்முழக்கத்தில் உள்ளது ஸுப்ரஹ்மண்யோம் என் பது ஸு+ப்ரஹ்ம+ந்யம்+ஓம் எனப் பிரிபடும். ஸு-சுகம். ப்ரஹ்ம-பெரியபொருள். ந்யம்-வேறு காணப்படுவது. ஓம் பிரணவம். பெரிய பொருளிலி ருந்து வெளிப்பட்டுச் சுகமயமா யிருப்பது, அது பிரண வப் பொருள் என்பது கருத்து. சாமவேதமும்

‘ஸுப்ரஹ் மண்யோம் ஸுப்ரஹ் மண்யோம்
ஸுப்ரஹ் மண்யோம்’
என முழங்கும். (காஞ்சி புராணம்)

‘எக்கலைக்கும் பூதங்க ளெவற்றினுக்கும்
பிரமனுக்கு மீச னென்னத்
தக்கமுதல் பரப்பிரமஞ் சதாசிவனேமென
வேதஞ் சாற்று மல்லான்
முக்கனல்சூழ் வேள்வியிற்சுப் பிரமணிய
னேமெனவு முக்காற் கூறு
மிக்கருத்தை யறியானை யெவ்வாறு
விடுவிப்ப தியம்பு மன்னே’

என அதனை எடுத்துக் காட்டிற்று. பிரணவம் சிவ நாமத்தைத் தொடர்ந்து வருவது

‘சிவோமே அஸ்து ஸதாசிவோம்’ என்ற சுருதியிற் காணப்படும். பிரணவம் செபிப்பவரைக் கரையேற்று கிற மந்திரம். கரையேறத் துடித்தார் தேவர். முருகன் சிவனாரின் வேறல்லாதவனென்பதைக் கருத்தில் வைத் துச் சிவஸுப்ரமண்யோம் என முழங்கின ரவர்.

சூரசம்மார மாயிற்று. குமாரக் கடவுளும் அமைதி பெற் றருளினர். வல்லீதேவியார் திருமணமும் நடந் தது அவரது திருவவதார லட்சியம் அத்திருக்கல் யாணத்தோடு நிறைவெய்துகிறது. அதுகுறித்தே அக்கலி யாண மூர்த்தியின் தியானம் கோஷமாயிற்று. வல்லீ காந்த ஸ்மரணம் என்பதற்கு வள்ளிதேவியாரின் கண வனரைத் தியானித்தல் என்பது பொருள்.

அந்நான்கு இரட்டை முழக்கங்களும் ஒருவாறு விளக்கப்பட்டன. இனி நம சப்தம் காயத்தொழில்.

ஸங்கீர்த்தன சப்தம் வாக்குத் தொழில். ஸ்மரண சப்தம் மனத் தொழில். நம: என்பதனோடு வரும் ஸங்கீர்த்தன ஸ்மரணங்களே பொருளுடையன வாகும். அது முன்னுங் கூறப்பட்டது.

இதுவரை கூறப்பட்டவற்றைச் சைவசமூகம் சிந்திக்க. சிந்தித்தால் சைவசமய பாரம் பரியம் சிறந்த அர்த்த வைபவ முடையதென்பது புத்தியிற் படாமற் போகாது. ஆகலின் சந்தர்ப்பம் நேர்ந்தபோ தெல்லாம் முழங்கத் தகுவன அவ்விரட்டைகளே யாம். அவற்றை முழங்குவதால் இம்மைப்போகங்கள் கைகூடும். பிறகு விரக்தி நிகழும். சரீரம் தளை யென்பது புலனும். அதனை அறுத்தெறியும் புத்தி வரும், அதற்கு உரமளிப்பன அவ்விரட்டைகளே. அவற்றை முழங்கினால் அத்தளை அறுபடவே செய்யும். உயிரும் விடுதி பெறும். அவ்விடுதியில் அவ்வுயிர்க்கு இருப்பிடம் பார்வதி பதியாரின் திருவடி நீழலே; அங்கே கிடைப்பது இறவாத இன்பம்.

## தென்னாடும் எந்நாடும்

பாரததேசத்தின் தென்கோடிப்பகுதி தமிழகம். அதில் தமிழர் வசிக்கின்றனர். அவருட் சைவ சமயத்தைச் சார்ந்தவரு மிருப்பர், பிறசமயத்தைச் சார்ந்தவரு மிருப்பர். சைவசமயத் தமிழருள் நேர்மையான தமிழ்ப் பற்றுடையார் பலப்பலர். ஆனால் சென்ற சில வருடங்களாக ஒருவகைத் தமிழச் சைவர் இருந்து வருகின்றனர். சைவசமயக் கூட்டங்களிற் புகுந்து சைவசமயப் பிரசாரங்களும் அவர் செய்வதுண்டு. புதுமையாற் கவ்வப்பட்டா ரவர். அதனால் அவர் இங்கு நவீன ரெனப்

படுவார். அந்நவீனருக்கு ஒரு சாதியினர் ஆகாதவர். வடமொழி அச்சாதியினரின் உடைமையாம். அம்மயக் கத்தால் அதனையும் வெறுப்பா ரவர். அவ்வெறுப்பே அந்நவீனரிடம் தமிழ்ப்பற்றாக உருக்கொண்டது. அத னால் அம்மொழியிலுள்ள பரசிவ வாக்காகிய வேத சிவா கமங்களையும், அவற்றின் வழிவந்த நூற்றுக்கணக்கான பிறசைவநூற்களையும் அவர் சோரவிட்டனர். சைவசமய தெய்வம் சிவபெருமான். அவருக்கு அம்மொழியிற் சிறந்த நாமங்கள் பலவுள. அவையும் அந்நவீனரின் வெறுப்புக்கு இலக்காயின. சைவமுந் தமிழுந் தழைத் தினி தோங்குக என ஆரவாரிப்பா ரவர். அவ்வாக்கி யமே அவர் போக்கைக் காட்டும், சைவம் உண்மை யிலேயே தழைத்தோங்க வேண்டுமாயின் வடமொழியும் தழைத்தோங்கவேண்டும். ஏன்? அதிலும் வேதசிவாக மாதி சைவநூற்கள் எண்ணிறந்தன. அவற்றின் பயிற் சியும் சைவருக்கு அவசியம். அஃதில்லாவிட்டால் அவற் றைப் போற்றமுடியாது. முடியாதாகவே சைவத்தைத் தழைத்தோங்கச் செய்வதுஞ் சாத்திய மன்று. சமய நூற்களைத் திறம்படக் கற்றுச் சமயத்தை வரம்பு தவ றாமல் ஆசரித்தலே அவற்றைத் தழைத்தோங்கச் செய்த லாம். ஆனால் அவ்வாக்கியத்தில் தமிழோடு வடமொழி சேர்க்கப்படவில்லை. நவீனருக்கு அம்மொழிப் பயிற்சி அநாவசியமா? ஆமெனில் அம்மொழிச் சைவநூற்களை அவர் வெறுக்கின்றா ரென்பதிற் சந்தேக மில்லை. தமிழ் தழைத்தோங்குக என்றா ரவர். அம்மொழியில் வேற்றுச் சமய நூற்களும் உள. அவர் அவற்றையுங் கற்று அம் மொழியைச் சுவைக்க வேண்டுமென விரும்பியவரே யாவர். வடமொழியை அலட்சியஞ் செய்வதால் பல

சைவநூற்கள் பயிலப்படாமற் போகின்றன. தமிழ் தழைத்தோங்குக என்ருல் வேற்றுச்சமயநூற்களும் ஆதரிக்கப்படுகின்றன என்பதாகும். சைவமுந் தமிழுந் தழைத்தோங்குக என்ருல் தமிழே தழைக்க வேண்டும், அதற்குத் துணைபுரியுமளவில் சைவந் தழைப்பது போதும் என்பதே கருத்து. சைவமுந் தமிழ்வடமொழி களுந் தழைத்தினிதோங்குக என்ருலோ சைவமே தழைத்தோங்க வேண்டும், தமிழும் வடமொழியும் சைவநூற்கள் நிரம்பியவாகலான் அந்நூற்களைப் பாது காத்தற் பொருட்டும், பயிலுதற் பொருட்டும், பிற்காலச் சந்ததிகளுக்கு உதவும்படி செய்தற் பொருட்டும் அம் மொழிகளும் தழைத்தோங்கவேண்டு மென்பதே கருத் தாய்முடியும். இருமொழிகளுந் தழைத்தால் தமிழி லுள்ள சைவநூற்கள் சிதையா, பாதுகாப்புப் பெறும், பொருள்விளக்க மெய்திச் சைவமக்களுக்கு நல்லபயனைத் தரும். வடமொழியை உதாசீனம் பண்ணிவிட்டால் அம் மொழி வாழாமற் போகாது. அவ்வுதாசீன புத்தியால் தமிழ் பாதகமடையும், அதிலுள்ள சைவநூற்கள் நவீ னர் செய்யும் விபரீதார்த்தங்களால் சீர்குலையும், சைவ சமயத்தின் சொரூபங் கண்டுகொள்ளப்படாமல் சைவ சமூகம் சிதறுண்டுபோம். இப்போதே அக்கேடு தலை காட்ட லாயிற்று. கண்ணுடையார் அதைக் காண்கின் றனர்.

தமிழ்வெறியே பிடித்த அந்நவீனர் அந்நான்கு இரட்டைகளையும் வெறுத்தனர். அவை வடமொழியா யினும் சைவமன்றே என்ற அச்சம் அவரைவிட்டு அகன் றது. அவற்றுள் இறுதி மூன்றும் பெரும்பாலும் மறைந்தன. முதலது மாத்திரம் இருந்துவருகிறது.

அதனையுந் தொலைக்க வழிகண்டா ரவர். திருவாசகத்தி லிருந்து இரண்டடிகள் அவருக்குக் கிடைத்தன. 'தென்னா டுடைய சிவனே போற்றி, யென்னாட் டவர்க்கு மிறைவா போற்றி' என்பன அவை. அவருள் ஒருவர் 'தென்னா டுடைய சிவனே போற்றி' எனவும், கூட்டத் தார் 'எந்நாட் டவர்க்கு மிறைவா போற்றி' எனவும் சத் தம்போடுவர் அதுவே அவ்வழி. திருவாசக அடிகளைச் சொன்னால் யாருங் குறுக்கிடார், அவ்வோ ரிரட்டை யும் போய்விடும் என்பது அவர் நினைப்பு. தமிழச்சைவ ருக்கு வடமொழி யிரட்டைகளின் அர்த்தந் தெரியாது தமிழிரட்டையானால் அதனருத்தந் தெரிந்துவிடும் என் றும் அவர் காரணங் காட்டுவர்.

அவ்வடிகளை முதன்முதல் அம்முழக்கத்துக்கென எடுத்துக்கொடுத்தவர் அந்நவீனருள் ஒருமூத்தவர். தமி ழரே சிறந்த அறிவுடையார், அவரே சிவனை முதன்முத லிற் கண்டவர், ஆகலின் சைவம் தமிழரின் சமயம், அது தென்னாட்டுக்கே உரியது, பின்னர் அது தமிழரால் எந் நாட்டிலும் பரப்பப்பட்டது என அவ்வடிகளுக்கு அவர் அர்த்தங் கற்பித்துக்கொண்டு தமிழ்ப் பெருமை தமிழர் பெருமையாதிய பிராகிருதப் பிரசாரங்களைச் சைவக் கூட் டங்களிற் செய்யலாயினர். நவீனருக்கு அவ்வர்த்தம் இனித்தது. அவ்வடிகளும் முழங்கப்பட்டன.

அத்திருவாசக அடிகள் சைவரின் வணக்கத்துக் குரி யனவே. ஆனால் நீதிகளை யுபதேசித்துத் தீயகாரியங் களைச் செய்யத் தூண்டுவாரு முளர். சிவபிரான்மேல் அம்பு எய்யுமாறு பிரமன் அவ்வுபதேசத்தாலேயே மன் மதனை ஏவினன் சாத்தானும் சாத்திரோபதேசஞ்

செய்வா னென்ற கருத்துள்ள ஆங்கிலப் பழமொழியு முண்டு. அம்முறையில் நவீனர் அவ்வடிகளை யெடுத்து முழங்குகிறார். அது கண்டிக்கத் தக்கது.

அம்முழக்கம் புதியது, சைவ சம்பிரதாயத்துக்கு மாறானது, மேலே சொன்ன வெறுப்பையும் வெறியை யும் அடிப்படையாகக் கொண்டது, சைவசமயத்துக்குக் கேடு சூழ்வது.

தென்னாடென்பது எது? தமிழ்நாடா? ஆயின் 'பாண்டி நாடே பழம்பதி யாகவும்' (கீர்த்தி) என்றது அந்நூல். 'தென்னவன் சேரலன் சோழன்' (குயில்) எனச் சிவன் கூறப்பட்டாலும் பழமை யென்ற அடை சேர சோழ நாடுகளுக் கில்லை. ஆகலின் தமிழகத்திலும் பாண்டிநாட்டுத் தமிழரே முதன்முதலிற் சிவனைக் காண டல்முதலியன செய்தா ரென்னவேண்டும். இன்னும் 'தென்பாண்டி நாட்டானே' (சிவ) என்றும் வருகிறது. அஃது இப்போதுள்ள திருநெல்வேலிச் சில்லாவைத் தான் குறிக்கும். பாண்டித் தமிழருள்ளும் அச்சில்லாத் தமிழர்தான் அச்சிறப்புக் குரியா ரென்றுஞ் சொல்ல லாம். அவர் வடபாண்டி, சேர, சோழ, தொண்டை முதலிய நாடுகளின் தமிழருக்குச் சைவாசிரியன்மாரா யிருந்தன ரென்று சொல்லுமளவுக்கு நவீனரின் ஆராய்ச்சிமுறை இடந்தருகிறது. இது அத்தமிழச் சைவரெல்லாரையும் அவமதித்த படியாம்.

தென்னா டுடைய சிவனே போற்றி யென்பது போன்று 'மலைநா டுடைய மன்னே போற்றி' (போற்றி) என்பதோ ரடி. அம் மலைநா டெது? அம் மன் யார்? அம் மன் பெயரா? காரணக் குறியா? பெயராயின் அந் நாட்டார் மன் என்னும் பெயருடைய கடவுளை வணங்கி வருபவ ராதல் வேண்டும். அப்படியா? காரணக் குறி

யாயின் சிவனென்பதும் காரணக்குறியே யாகலாம். அங்ஙன மாயின் தென்னாட்டுக் கடவுளுக்குப் பெயர் வேறுதான். அஃதெது?

தென்னா டுடைய சிவனே போற்றி யென ஒருவர் முழங்கினால் கூட்டத்தினர் அஃதில்லை அவன் எந்நாட்ட வர்க்கு மிறைவன் எனக் கூறி மறுக்கு முறையில் எந் நாட்டவர்க்கு மிறைவா போற்றி என முழங்கினா ராகாரா?

தென்னா டுடைய சிவனே போற்றி யென்பதில் தென்னாடு உடையதும் சிவன் உடைமையுமா? தென் னாடு உடைமையும் சிவன் உடையவனுமா? தென்னாடே உடையதெனப்பட்டால் அந்நாடு தலைமை யெய்தி அக் கொள்கை சிவநிந்தையாய் முடியும். சிவனே உடையவ னெனப்பட்டால் அவன் 'மூவே ழுலகுக்குந் தாய்' (புணர்) ஆவான். தென்னாடு அவற்றுள் ஒருலகின் மிகச் சிறு பகுதியா யடங்கும். அவனைத் தென்னாட்டானெனல் வெறும் பேச்சே.

தமிழர் கண்டாரெனப்படுஞ் சிவனுக்கு ஒரு தமிழ் மனைவி அகப்படாமற் போனதேன்? அவன் 'மலைக்கு மருமகன்' (பொற்) ஆனான். 'மலையாள் மணவாளா' (நீத்தல்) என்றதுங் காண்க. அம்மலையாவது இமயம். அது தமிழகத்துக்குப் பலநூறு மைல்களுக்கு அப்பா லுள்ளது. மலையாள்—பார்வதி.

தென்னாட்டாரின் சிவனே பிற நாட்டாரின் இறை வனுமாவனென்றால் அப் பிற நாட்டார் அவனை இறைவ னென்ற பெயரால் வழங்கிவருதல் வேண்டும். அஃதில்லை. இறைவனென்பது தமிழ்ச் சொல். சிவனென்ற பெயர் தான் அங்கும் வழக்கத்தி லுள்ளது அவன் தமிழராற்

காணப்பட்டானென்பதெப்படி? அப்பெயர் தென்னுட்டுக்கே உரியதாயின் தொல்காப்பியம் திருக்குறள் என்ற இருபெரும் புராதன நூற்களில் அப்பெயர் வராமை ஏன்?

ஆகவே சிவன் தென்னுட்டுக் கடவுளென்பது அபத்தப் பிரசங்கம் 'ஒலிதரு கயிலை யுயர்கிழ வோனே' (கீர்த்தி), 'கயிலாய மென்னு மலைத் தலைவா' (நீத்தல்), 'கயிலைமா மலை மேவிய கடலே' (செத்தி), 'கயிலை புகு நெறி யிதுகாண்' (அருட்) என்பவற்றுல் சைவ சமய தெய்வமாகிய சிவபெருமானுக்கு அநாதியான இருப்பிடம் கயிலைமலையே யென்பதறிக. அதுவே சிவலோகம். தமிழகத்தைத் திருமந்திர நூல் தந்து உய்வித்த திருமூலர் அங்கிருந்து வந்தவரே. சுந்தரரும் அங்கிருந்து வந்து திருத்தொண்டத் தொகை தந்து தென்னுட்டை உய்வித்து மீண்டும் அங்குத்தான் சென்றுர். மெய்கண்டாருக்குச் சிவஞானபோதத்தை உபதேசிக்கு முகத்தால் தமிழரை வாழ்வித்த பரஞ்சோதி முனிகளும் அக்கயிலை வாசியே. இன்ன வரலாறுகள் பலவுள.

இன்னுங் கேட்க, 'அப் பாண்டி நாட்டைச் சிவலோக மாக்குவித்த' (அம்மா) என்றது அத் திருவாசகம். பாண்டிநாடு தென்னுடாக்கப் பட்டதென்பது அதன் கருத்தன்று. பாண்டிநாடு என்ன ஆயிற்று? சிவலோக மாயிற்று. ஆக்கினவர் யார்? ஆக்குவித்தவர் யார்? ஆக்கினவர் உமாதேவியார். ஆக்குவித்தவர் சிவபிரானுர். அப்பிரானுரே அப்போது தென்னுட்டின் தலைநகரா யிருந்த மதுரையிற் போய் அவதரித்து மீனுட்சி யென்னும் பெயர்தாங்கி அரசியாகி மேன்மைகொள் சைவ நீதியிலே ஆட்சி புரியும்படி அத் தேவியாருக்கு உத்தர

விட்டார். பின்னர் அவரே அம் மீனுட்சியாரை மணந்து சோமசுந்தர பாண்டியராகி அவ்வாட்சியைப் பெற்றுத் தென்னுட்டோடு எங்காட்டையுமே ஆண்டுவரலானர்.

> 'இவ்வாறு மற்றைத் திசைக்காவலர் யாரையும் போய்த்
> தெவ்வாண்மை சிந்தச் செருச்செய்து திறையுங் கைக்கொண்
> டவ்வாறு வெல்வாளென மூன்றர ணட்ட மேருக்
> கைவார் சிலையான் கைலைக்கிரி நோக்கிச் செல்வாள்'

என்றது திருவிளையாடற் புராணப் பாட்டு. மதுரையரசியாகிய மீனுட்சியம்மையார் திக்குவிஜயஞ் செய்து எல்லாரையும்வென்று இறுதியாகச் சிவனுடனும் போர் செய்யக் கருதி அவனது இராச்சியமாகிய கயிலைக்குச் சென்றுர். இதனுல் அச் சிவன் தென்னுட்டவனல்லனென்பது சித்தம்.

> 'அதிர்விடைக் கொடியங் கயற்கொடி
> யாக வராக்கலன் பொற்கல னுகப்
> பொதியவிழ் கடுக்கை வேம்பல
> ராகப் புலியதள் பொலந்துகி லாக
> மதிமுடி வைர மணிமுடியாக
> மறைகிடந் தலம்புமா மதுரைப்
> பதியுறை சோமசுந்தரக் கடவுள்
> பாண்டிய னுகிவீற் றிருந்தான்'

என்றது அதன் மற்ருெரு பாட்டு. அக் கயிலையங்கிரி மன்னன் மதுரைக்கு வந்து பாண்டி மன்னனுயினு னென்பது அதனுல் தெரிகிறது.

'தென்னவர் வடிவங்கொண்ட சிவபரன்' என்றது இன்னொரு பாட்டின் அடி. சிவபரன் தென்னவர் வடிவமே கொண்டான், ஆனுல் தென்னவ னல்லன் வேருெரு திசைக்குரியவனே யென்பது அதனுல் விளங்குகிறது. பாண்டியன் அல்லது தென்னவன் வடிவங்கொண்டு

ஆண்ட அக் கயிலாச வாசனே அவ்வவசரத்தில் தென்னு டுடைய சிவனுனன்.

> 'வழுதிமரு மகனுகி மீனநோக்கின்—மடவரலை மணந்
> துலக முழுதாண்ட சுந்தரனை வணக்கஞ் செய்வாம்'

என்றது வேருெரு பாட்டின் அடி. அதனுற்ருன் அவன் எந்நாட்டவர்க்கு மிறைவ னெனப்பட்டான்.

> 'வேந்தர்க் காட்டுவா னுடிக் காட்டுந்
> தன்மைபோ லரசு செய்து
> காட்டுவா னுகி யையன்
> றிருவுளக் கருணை பூத்தான்'

என்றது பின்னெரு பாட்டின் அடி. இவ்வுலகத்தரசரை வழிபடுத்தற்கு அவன் ஆட்சிபுரிந்து காட்டினதும் ஒரு திருவிளையாடலேயா மென்பது அதனுற் போதரும். ஆகவே மதுரையில் அப்பெருமான் நடத்திய தொரு திருவிளையாடலைப் பொருளாக் கொண்டனவே தென்னு டுடைய சிவனே போற்றி. யென்னுட்டவருக்கு மிறைவா போற்றி யென்ற அடிகள். அவை சைவசமயப் பிரபாவமே. அதைக் கொண்டுபோய்த் தமிழுக்குந் தமிழுருக்கும் ஒட்டவைத்துப் பேசுவது சைவ சமூகத்தை வேறு வழியில் திருப்புவதாய் முடியும்.

## முடிப்புரை

நம: பார்வதீ பதயே, ஹர ஹர மஹா தேவ என்பது முதலிய நான்கு இரட்டைகளும் தொன்றுதொட்டு வருகிற முழக்கங்கள். அவற்றின் பொருட்சிறப்பு மேலே சொல்லப்பட்டது. தவறென்று மில்லாதன அவை. அவை பிழையுளனவேல் வேறுமுழக்கம் தேவைதான். கெட்ட புத்தியை வைத்துக்கொண்டு நல்லதை

முழங்கினுலும் கேடே வரும். பிரமன் காமனுக்குச் செய்த வுபதேசம் அப்படி முடிந்தது. ஹர ஹர என்றும், சிவ சிவ என்றும், பவ பவ என்றும் இன்னும் பல வகையாலும் முழங்கலாம். ஆனுல் பெரியபுராண முதலியவற்றுள் ஹர ஹர என்பதே காணப்படுகிறது. அதனுண்மையை ஆய்க. நவீனர் முழங்குவதுந் திருவாசக அடிதானே, சிவனைப் பற்றியது தானே எதை முழங்குவதும் சரிதான் என்பர் சிலர். ஆராயுஞ் சிரத்தை அவருக் கில்லை. ஆகலின் அவர் கூற்றுப் பிதற்றலே. ஒன்று நடைமுறையி லிருந்துவரும்போது இன்னென்றையுங் கொண்டுவந்து புகுத்துவது மிகையென்னுங் குற்றமாகி முன்னதற்குத் துரோகஞ் செய்வதாய் முடியும். மிகை—அநாவசியம் ஆகலின் அக்குற்றம் பெரிது. அதனுற் புதியதும் பயன்படாமற் போம். பயனைக் கருதுவார் அதனைத் தெரிவார்.

ஏதேனு மொன்றைப் புதிதாகப் புகுத்தி விளக்க முங் கூறினுல் உடனே அங்கீகரிப்பது அறிவுடைமை யாகாது. அப்புதுமை எதனுல் வந்தது? அதற்கு மூலமெது? நோக்கமெது? என்ற விசாரணை அவசியம். அப்படி விசாரித்தால் அத்திருவாசக அடிகளின் முழக்கம் சைவசமூகத்துக்குச் சைவசமயாபிமானங் குன்றியதால் வந்தது. அதனைப் புகலாசக் கொண்ட நவீனரின் வடமொழி வெறுப்பும் தமிழ் வெறியுமே அம் முழக்கத்துக்கு மூலம், சைவசமயத்தை விட்டுச் சைவசமூகத்தை இன்னும் பிரித்து அலமரச் செய்வதே அம்முழக்கத் தின் நோக்கம் என்பது புலனுகாம லிராது

திருவாசகந் தோன்றிய நாள்தொட்டு அதிலிருந்து அவ்வடிகளைப் புய்த்தெடுத்து இதுவரை எந்தச் சைவ

ரும் முழங்கினு ரல்லர். அவ்வடிகளுக் கருத்தம் அவர் தெரியாரா? அவரைவிட நவீனர் தெரிந்துகொண்ட தொன்றுமில்லை. அவர் விபூதி யணிந்துகொள்வர், உருத் திராக்ஷகம் பூண்டுகொள்வர், தேவார திருவாசகாதிகளி லிருந்து பாடல்களை எடுத்தாள்வர், சைவமேடைகளில் ஏறி அவை குலுங்கும்படி கர்ச்சித்துப் பேசுவர், இன் னும் பல செய்வர். அப்போதெல்லாம் அவருள்ளத்தில் நாம் சைவசமயம்பேசுகின்றோம் என்ற மகிழ்ச்சி சிறிதும் இராது. அவ்வுள்ளம் தமிழிலேயே கழித்துக்கிடக்கும்.

'களித்தானைக் காரணங் காட்டுதல் கீழ்நீர்க்
குளித்தானைத் தீத்துரீஇ யற்று' (929)

என்றது திருக்குறள். வேளை வந்தபோது அவர் தெளியத்தான் செய்வர். சிவத்துரோகம் பொல்லாதது. அதற்குப் பிராயச்சித்த மில்லை. ஆகலின் நவீனரைவிட் டுச் சைவசமூகம் ஒதுங்குக. அத்திருவாசக அடிகள் சைவசமயத்துக்கே உரியன. ஆயினும் அவற்றைப் புய்த்தெடுத்து முழங்குதல் கூடாது. அது சம்பிரதாய விரோதம், மிகையுமாம், அதனை யோராமல் அம்முழக் கத்தை முதன்முதல் ஆரம்பித்தவர் ஒரு சாமானிய ராய்த்தா னிருக்கமுடியும். அவரை மிதமிஞ்சி மதிப்பது சத்சாத்திர சதாசார சம்பந்நராகிய சான்றோரும் அவர வர் காலத்தில் சாமானியராகவே யிருந்திருப்பரென எண் ணற் கிடஞ்செய்யும். அது பாவமும் பழியுமாம். அதற்கு ஆளாகாதிருத்தல் அவசியம். அதற்கு வழி அவ்வடி களைப் புய்த்தெடுத்து முழங்காமல் விடுவதே யாகும். சநாதன தர்மமாகிய நம: பார்வதீ பதயே, ஹர ஹர மஹாதேவ என்பது முதலிய நான்கு இரட்டைகளுமே முழங்கற் பாலன. சைவசமூகம் அவற்றையே முழங்கிச் சிவசகாயம் பெற்று மகிழ்வதாக.

மேலும் புதுமுழக்கம் ஒன்று புறப்பட்டால் அது ஒருமைப்பாட்டின் கட்டைக் குலைத்து ஆங்காங்கே பல் வேறு முழக்கங்கள் முளைப்பதற்கும் வழிகோலுவ தாகும், கட்டுக் குலைந்த சமூகத்துக்கு உயரிய குறிக்கோ ளிராது.

திருவாசக அடிகள் முழக்கத்துக்கு வந்து சில வருடங்களே யாயினும் அம்முழக்கத்தை இதுவரை கொண்டிருந்து இப்போது விடுவது எப்படி எனக் கருதி அதனைப் பற்றிக் கிடப்பது

'கொடிறும் பேதையுங் கொண்டது விடாது' (போற்றி)

என்னும் அடிக்கு இலக்கிய மாகும். சாமானியரே அத் திருவாசக அடிகளைப் புய்த்தெடுத்து முழங்கத் தலைப்பட்டனர்; அசூயை துவேஷம் துரர்த்தம் முதலியவே அதற்குக் காரணம்; ஆகலின் அம்முழக்கத்தைத் தொடக்கத்திலேயே களைந்தெறிய வேண்டும்; இன்றேல் அது வலுத்துவிடும்; கேடும் பெருகும்; பின்னர் அதை யொழிப்பது கஷ்டசாத்தியம்;

'இளைதாக முண்மரங் கொல்க களையுநர்
கைகொல்லுங் காழ்த்த விடத்து'

என்றார் திருவள்ளுவரும் என்ற கருத்தினராய் அக்களைந் தெறியு முயற்சியை அக்காலே வைதிக சைவ விற்பன்னர் அன்றே செய்துள்ளனர். அவ்வகையில் அவர் வெளியிட்ட அச்சுத் துண்டுப் பிரசுரங்கள் சில. அவற்றுள் ஒன்றற்குச் சரியான ¶ பிரதி இங்கே சேர்க்கப்பட்டிருக்கிறது.

| | |
|---|---|
| நம: பார்வதீ பதயே | ஹர ஹர மஹாதேவ |
| சிற் சபேசா | சிவ சிதம்பரம் |
| கார்த்திகேய நாம ஸங்கீர்த்தனம் | சிவ சுப்பிரமணியோம் |
| வல்லீகாந்தஸ்மரணம் | சிவ சுப்பிரமணியோம் |

நம: பார்வதீ பதயே

முற்றிற்று

ஸ்ரீமத் சிவஞான சுவாமிகள் திருவடி வாழ்க!

Jai Bharath.

---

¶ 41-ம் பக்கம் பார்க்க.

## 40-ம் பக்கத்தில் குறிப்பிட்டுள்ள துண்டுப் பிரசுரம்

வெளியீடு 1.

உ

சிவமயம்

திரு. மறைமலையடிகளே

திரு. கா சுப்பிரமணிய பிள்ளையவர்களே M. A., M. L.,

1929-ம்ஞு மார்ச் மீ 29, 30, 31–ம் தேதிகளில் திருநெல்வேலியில் திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளையவர்கள் தலைமையிலும் ஷ ஞூ மே மீ 17, 18, 19, 20 ம் தேதிகளில் திருப்பாதிரிப் புலியூரில் உங்களில் திரு. மறைமலையடிகள் தலைமையிலும் 'சைவமகாநாடு' என்ற பெயர்கொண்ட கூட்டங்கள் கூடியதும் தீர்மானங்கள் நிறைவேற்றியதும் பலரும் அறிந்த விஷயமே.

அச்சமயங்களில் யாங்கள் ஷ கூட்டங்களில் சைவ சமயப் பிரமாண நூல்கள் ஆசாரங்கள் முதலிய சில முக்கிய விஷயங்கள் சம்பந்தமாய்ப் பின்வரும் *12* கேள்விகளும் தீர்மானிக்கப் படல்வேண்டுமென்று எழுதியிருந்தோம்.

### வினக்கள்

1. சைவசமயத்துக்குப் பிரமாணநூல்கள் இப்பொழுது ஆட்சியிலிருந்து வரும் வேதாகமங்கள் தானு? வேறுநூல்களும் வேண்டுமா? வேதாகமங்களே வேண்டப்படாது புதிய நூல்கள் வேண்டுமா?

2. தமிழ்ச் சித்தர் நூலுக்கும் சைவசமயத்துக்கும் சம்பந்தம் என்ன?

3. சமயத்திற்குரிய பிரமாணநூல்கள் காலந்தோறும் மாறுபடுத்தப் படல்வேண்டுமா?

4. சமயநூல்களிற் கூறப்பட்டிருக்கும் விஷயங்க ளெல்லாம் இப்பொழுதுள்ள நம்முடைய அறிவுக்கு அநு பவமாய்ப் பொருத்தமாய் இருக்குமா? இல்லையென்றால் அவைகளைத் தவறானவை யென்றுதள்ளி விடலாமா?

5. வேதங்கள் சைவசமயத்திற்குப் பிரமாண நூல் களல்ல என்பதற்கு அவற்றின் உரைகளும் அவ்வுரை களைப் பின்பற்றி வந்திருக்கும் மொழிபெயர்ப்புக்களும் சான்றாகுமா? வேதத்திற்கும் சிவாகமங்களுக்கும் சம்பந்தம் என்ன?

6. மொழிபற்றிய சமயம் உண்டா? சைவசமயம் தமிழ்ச் சமயமா? சைவசமயம் சம்பந்தப்பட்ட மட்டில் வடமொழி-தமிழ்-வியவகாரம் வேண்டுமா?

7. புராணங்களை வேதம் சிவாகமம் திருமுறைகள் சித்தாந்த சாத்திரங்கள் எடுத்தாளும் முறையில் நாம் செய்ய வேண்டிய தென்ன?

8. ஆகமங்களைப் பிரமாணமாக ஒப்புக்கொள்ளாத வர்களுக்கு ஆகமக் கோவில்களில் சம்பந்தம் உண்டா?

9. ஆகமக்கிரியைகளையும் ஆகம ஞானத்தையும் பரப்புவதற்கு ஏற்பட்ட மடாலயங்களை எம்முறையில் சீர் திருத்தவேண்டும்?

10. சைவர்கள் ஒரு சமுதாயத்தாரென்று சொல்லப்படு முறையில் கையாள வேண்டிய அனுட்டானங்கள் என்ன?

11. தற்காலத்தில் நவீனமாக நடந்துவரும் பின்வரு பவைகளுக்குப் பிரமாணம் உண்டா? அவைகளை எல்லா ரும் ஏற்றுக்கொள்ள வேண்டியதுதானா? அதனால் பாதகம் உண்டா?

(1) தமிழ் மணவினை

(2) ஆகமப்பொதுச் சிவாலயங்களில் மக்களின் மணம் நடத்துதல்.

(3) 'தமிழ் நான் மறை' ஒன்றிருந்ததென்று சொல்லப்படுதல்.

(4) 'ஹர ஹர நமப் பார்வதீ பதயே' என்று பண்டு தொட்டு வழங்கி வரும் சிவநாமாவளியை வழக்கத்திலிருந்து நீக்குதல்.

(5) 'தென்னாடுடைய...........இறைவா போற்றி' 'சீரார் பெருந்துறைநம்.........மலை போற்றி' என்ற அருமைத் திருவாசகச் சொற்றொடர்களை நாமாவளியாகக் கையாளுதல்.

12 தற்காலம் வரை சைவசித்தாந்தத்திற்குப் பிரமாண மாக ஆட்சியிலிந்து வருகிற வடமொழி வேதம் சிவாகமம் புராண இதிகாசங்களும் தமிழ்ப் பன்னிருதிருமுறை பதினான்கு சித்தாந்த சாத்திரங்களுமாகிய நூல்களைத் தற்கால ஆராய்ச்சியாளர் தங்கள் கொள்கைகளுக்குத் தக்கவாறு திரித்தும் புதிய கொள்கைகளைப் புகுத்தியும் பழைய (வைதிக சைவ) சமயத்தைப் பற்றி நிற்க இடர்ப்படுவதை விடப்,புதிய ஆராய்ச்சியின் பயனாகப் புதியதோர்மதம் சாத்திர முதலியன ஏற்படுத்திக் கையாளுதல் இவ்விருபதாம் நூற்றாண்டிலுள்ள நவீன ஆராய்ச்சியாளருக்குப் பொருத்த முடையதல்லவா?

இக்கேள்விகள் சம்பந்தமாய்த், திருநெல்வேலியிற் கூடிய கூட்டத்தலைவர் திரு.ச, சச்சிதானந்தம் பிள்ளையவர்கள் தமது 21—3—29 கடிதத்தில் 'தாங்கள் கேட்கும்

வினுக்கள் யாவும் சைவப் பெரியார் தனிக்கூட்டத்தின் ஆராய்ச்சிக்குரியனவே. அவசியம் அவைகளை அக்கூட்டத்தின் ஆராய்ச்சிக்குத் தருகிறேன்', என்று எழுதினுர்கள். ஆனுல் இவ்வினுக்கள் ஷை கூட்டத்தில் எவ்வித முடிபும் அடையவில்லை.

அதன்பின் இவ்வினுக்களைத் திருப்பாதிரிப் புலியூர்க் கூட்டத் தலைவர் முதலிய பலர்க்கும் யாங்கள் அனுப்பியிருந்தோம். அங்கும் இவற்றிற்கு ஒரு முடிபும் ஏற்படவில்லை.

இந்தநிலையில் சைவசமயத்திற்குப் பிரமாண நூல்களாக இருந்துவரும் வேதசிவாகமங்கள் விஷயமாயும் பன்னிரு திருமுறைகள் பதினுன்கு சித்தாந்த சாஸ்திரங்கள் விஷயமாயும் பலநூதன அபிப்பிராயங்களை எழுதியும் கூறியும் வரும் தாங்கள் இவ்வினுக்கள் 12-க்கும் இப்பொழுதேனும் அறிஞர்கள் ஒப்புக்கொள்ளுமாறு பிரமாண வாயிலாய் விடையளிப்பீர்களென்று எதிர்பார்க்கிறேம்.

4—4—31
திருநெல்வேலி

தி. க. உலகநாத பிள்ளை
அமைச்சர்,
வைதிக சைவ சம்மேளனம்.

# இந்து என்ற பெயர் இழிந்த பொருளுடையது

(13-ம் பக்கத்தில் கூறியிருப்பதின் விளக்கம்—மேற்கோள்கள்)

## 1. உள்ளங்கவர் கள்வன்

(By கி. வா. ஜகன்னுதன்)

"இந்துமதம் என்று இக்காலத்தில் வழங்கும் பெயர் பலசமயங்களுக்கும் பொதுவானது. அப்படி ஒரு தனிச் சமயம் இல்லை. ஆனாலும் சைவம் வைணவம் முதலிய சமயங்கள் பலவற்றிற்குப் பொதுவாக அந்தப் பெயர் அயல் நாட்டவரால் வழங்கப்பெற்று, நாளடைவில் நாமும் வழங்கும்படியாயிற்று"

## 2. காங்கிரஸ் 15–7–56.

((ஜூன் வெளிவந்த பிலிம் இண்டியாத் தமிழாக்கம்)

"ஆங்கிலச் சரித்திரப் பேராசிரியர்கள்தான் முகலாயர்கள் இந்தியருக்குக் கொடுத்து வந்த 'இந்து' என்ற பெயரை எடுத்துக்கொண்டு மேலும் மேலும் அழுத்தமாக வற்புறுத்தி......பிரிவினையை ஏற்படுத்துவதற்குக் காரண கர்த்தாக்களாக இருந்தார்கள். முகலாயர்கள் இந்தியாவைப் படையெடுப்பதற்கு முன்பு ஹிந்துக்கள் என்ற பெயரே கிடையாது."

## 3. பிரம வித்தியா பத்திரிகை

(புத்தகம் 4. இலக்கம் 14. பக்கம் 201. 202.)

பக்கம் 201

"ஹிந்து என்னுஞ் சொல் புதியதே. இதைச் சிலபாஷாகவிகள் உபயோகிக்கின்றனர். சில நவீனர் இது மகமதியரிட்ட பெயரென்றும், மற்றவர் யவனர் ஸிந்து நதிக்கரையில் வசிப்பவராதலின் ஹிந்துக்களெனப் பெயரிட்டாரென்றும், வேறு சார்பினர் இஃதறிஞர் பெயரென்றும் பிறர் ஓர்வகைச் சித்தாந்திகள் பெயரென்றும், மற்றவர் ஒதுக்கப் பட்டவர் பெயரென்றும் சிலர் பிரஷ்டர் பெயரென்றும் பலவழி சொல்லுகிறார்கள்.

பக்கம் 202.

"இச் சொல் மகமதியர் விசேஷமாய் நெடுங்காலமாய் வியவகரிப்பதாய ஆரட்ட பாஷை (அதாவ்து அரபிபாஷை). அதில்

ஹிந்து என்று (அஞ்ஞானி என்னும் பொருளில்) இருக்கின்றது. அவர்கள் இந்த இந்தியா தேசத்தின் ஆக்ஷியைக் ைகக்கொண்ட பொழுது தம்மவர் ஞானிகளாகவும் மற்றவர் அஞ்ஞானிகளாகவும் எண்ணி இப்பெயரை இட்டார் என்பது.''

## 4. தினமணி 10—3—58.

''ஹிந்தி என்ற வார்த்தையே இந்தியச் சொல் அல்ல என்று ராஜாஜி இங்கு தமிழர் அளித்த வரவேற்பில் பேசுகையில் கூறினுர். பூர்வீக பாரசிகர் இந்தியாவுக்கு வந்தபோது இந்தியா வின் பூர்வீக குடிகள் பேசிய மொழிக்கு 'ஹிந்தி' என்று பெயரிட் டனர் என்று அவர் விளக்கினுர்''

## 5. R. K. முகர்ஜி

*என்பவர் சென்னைக் கோகலே ஹாலில் 27-9-41ல் நடந்த கூட்டமொன்றில் பிரசங்கித்தது.*

"India and Hinduism are Organically related like body and soul. The name HINDUISM was given to them by Persians"

## 6. படுக்கை யறையில் பாசாங்கு செய்த பங்கஜவல்லியின் கதை.

''கிறிஸ்து பிறந்த 1191-வது வருஷத்திலே சகாபுடீன் கோரி என்னப்பட்ட மகமதிய அரசன் டில்லி இராஜ்யத்தை ஜயித்து மக மதிய அரசை நிலைபெறச் செய்தபோது, இந்நாட்டவர்களாகிய ஆரியரை இந்துக்களென்று அழைக்கத் தொடங்கினர்......இதனை இத்தேச புராதன சரித்திரமாகிய 'பாரத் பாகி' என்னப்பட்ட நூலிற் காணலாம்''

## 7. HINDU 23—11—1947.
(Origin of the word Hindu.)

''Gandhiji then referred to a question that was sent by a member of the audience; What is a Hindu? What is the origin of the word? He said that these were pertinent questions and topical and added he was on

historian and he laid claim to no learning. But he had read in some authentic book on Hinduism that the word Hindu did not occur in the Vedas, but when Alexander the great invaded India, the inhabitants of the country to the east of the Sindhu, which is known to English-speaking Indians as Indus, were discribed as Hindus. The letter 'S' had become 'h' in Greek. The religion of these inhabitants become Hinduism"..,......என வந்துள்ளது.

## 8. பிரம்ம வித்யா பத்திரிகை

(புத்தகம் 4, இலக்கம் 14, பக்கம் 201, 202.)

''பார்ஸி பாஷையில் ஹ என்னும் எழுத்து ஸம்ஸ்கிருத பாஷையில் ஸ என்னு மெழுத்தாய் முடிகின்றது. ஆயின் ஸிந்து நதிக்கரையைச் சேர்ந்தவர்களை ஸிந்துக்களென ....... சொல்ல வேண்டியிருக்க அவர் பாஷையி னியல்பு மாறுது ஸ என்னு மெழுத்தை ஹ என மாற்றி ஹிந்து என்கிறுர்கள்'' என்றது. அவர் என்றது யவனரை (கிரேக்கர்)

குறிப்பு :- இதுவும் காந்தி சொன்னதும் ஓரளவு ஒத்திருக்கின்றன.

## 9. ''ரத்ன மாலிகா''

(விச்சூர் முத்துக்குமாரசாமி முதலியார் B. A.)

'' பழங்காலத்தில் பாரசீக வியாபாரிகள் கைபர் கணவாய் வழியாகப் பாரத தேசத்தோடு வியாபார சம்பந்தமாகப் போக்கு வரத்துச் செய்து வந்தனர். அவர் கொண்டுவந்த சரக்குகளைப் பாரதத்தின் வடமேற்கெல்லையி லுள்ள மலைவாசிகள் அடிக்கடி கொள்ளையிடுவதுண்டு. அதனுல் அப் பாரசீகர் அவரை ஹிந்துக் களென் றழைத்தனர். ஹிந்து என்பது பாரசீக பதம். அரபு அதற்கு மூலமாகலாம். கொள்ளைக்காரன், அடிமை, கறுப்பன் என்பன அதற்கருத்தம்''.

## 10. பங்கஜவல்லி கதை

''நம்மவர்கள் இந்நாட்டிற் குடியேறிய முகமதியர்களை அசுத்தர் என்னும் பொருள் தரத்தக்க 'மூலக்' என்னும் பெயரால் அழைத்தமையால், அவர்கள் இவர்களை விசுவாச மில்லாதவர்

கள் என்னும் பொருளைத் தரத்தக்க இந்துக்கள் என்னும் பெய ரால் அழைத்தார்கள். மூலக் என்னப் பட்ட பெயர் மகமதியர் களுக்கு நெடுநாள் வரையில் வழங்கப் பட்டிருந்தது''.

11. பிரம வித்யா

(புத்தகம் 9, இலக்கம் 18, பக்கம் 272.)

''இந்து என்ற நாமம் பாரசிக பாஷையில் கரியன், பொய்யன், அடிமை யென்று பொருளாம்''

12. தமிழ்நாடு 5-1-56

''சென்னை ராஜ்யத்தின் கவர்னராயிருந்து வந்த வடவராகிய ஸ்ரீ பிரகாசாவும்''

''இந்து என்று கூறும் சொல் தவறுனது என்றும் சனு தன தர்மம் என்றுதான் கூறவேண்டும் என்று பேசியிருக்கிறுர்.

13. பிரம்ம வித்யா

'இதுவரையி லொருவரும் காணுத வர்த்தங்களைக் காட்டு கிறதுமாகிய இந்து சப்தார்த்த விசார மென்றுேர் புத்தகம்' (பி. வி. 5, 20, 333) என்பதால் இந்து என்பது இந்நாட்டுப் பூர் வீக சம்ஸ்கிருத விற்பன்னர் யாருமே ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொள்ளாத சூதகச் சொல் அல்லது அயல்நாட்டுச் சொல் என்பது விளங்கும். ஆகலின் அவ்வர்த்த விசாரப் புத்தகம் அவ் விற் பன்ன பரம்பரையின் அருவருப்புக்கு இலக்காயின தென்றலே திண்ணம்.

14. CHAMBERS DICTIONARY

"A native of Hindustan; now more propoerly applied to native Indian belieavers in Brahmanism, as opposed to Mohammedans.

15. THE POCKET OXFORD DICTIONARY

Hindu—one esp. Aryan of N. India, who professes HINDUISM

Hinduism— Poly theistic religion of Hh (Skr' sindhu River, esp, the Indus)

## Mr. H. V. PATASKAR

Governor of Madhya Predesh
(Indian Express Dated 11—1—60

Sanchi Jan 9.

Mr. H. V. Pataskar Governor of Madhya Predesh Said here today that 'Hinduism' was not a religion but a culture or a synthesis of all faiths which originated in India............He said that the word 'HINDOO' itself came into existence in about the 12th century A. D. more than a thousand years after the period of Buddha. There was never and there had never been a religion known as HINDUISM in the sense of its being a single form of faith or worship. Hinduism as it came to be understood later and was understood commonly even now included all forms of worship and faiths in India except the two faiths of Islam and christianity which originated outside India.

குறிப்பு:- **'இந்து'** என்ற சொல்லுக்குத் தனக்கென ஒரு பொருள்கிடையாது. ஒவ்வொருவரும் அவரவர்மனதில் தோன்றியபடி பொருள் கொள்கிறுர்கள் என்பதும் மேற்காட்டிய மேற்கோள்களினுல் தெரிந்து கொள்ள லாம்.

உ

# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 11 | லதிபதிராய், | லஜபதிராய் |
| ... | 16 | முயன்றனறெ | முயன்றனரெ |
| ... | 22 | பட்டது | பட்டது. |
| 2 | 27 | யாகும் | யாகும். |
| 3 | 9 | vric | vic |
| 4 | 19 | அது | அது. |
| 5 | 16 | கருதுவாறு | கருதுவாரு |
| 6 | 16 | புண்ணுகும் | புண்ணுகும். |
| 7 | 12 | லெலின் | லெனின் |
| 8 | 24 | மின்னமை | மின்மை |
| ... | ... | இறமை | இறைமை |
| 14 | 13 | முழங் | முழங்கு |
| ... | 21 | என்பதை | என்பதைச் |
| 18 | 26 | அகமுழ | அம்முழ |
| 19 | 5 | யாவர் | யாவார் |
| ... | 24 | டாய | பாய |
| 21 | 3 | பார்வநீ | பார்வதீ |
| ... | 8 | ஐயேஷ் | ஜ்யேஷ் |
| ... | 20 | தணிக்கை | தணிகை |
| 22 | 3 | குறிக்சி | குறிக்கி |
| 23 | 5 | பெண்ஊெ | பெண்ணே |
| ... | 17 | பொன்னறை | பொன்றை |
| 24 | 5 | நீரே | நீரே எமக்கு |
| 37 | 13 | வழிபடுத் | வழிப் படுத் |
| ... | 17 | டவருக்கு | டவர்க்கு |
| 39 | 10 | கழித்து | களித்து |

குறுகிய காலத்தில் அச்சிட்டதால் பிழை பொறுக்க வேண்டுகிறோம்.

இராமலிங்கர் அச்சகம், நெல்லை.